


என் தந்தையின் நண்பரது அலுவலகத்தில் ரிஸப்ஷனிஸ்ட் வேலை காலியாக இருப்பதை அறிந்து, அவ்வேலைக்கு விண்ணப்பித்தேன். நேர்முகத் தேர்வுக்கான அழைப்பும் வந்தது.

"இது மிகவும் பொறுப்பான வேலை. மேலும் உனக்கு ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரிந்திருக்க வேண்டுமே... வேறு ஏதாவது வேலை இருந்தால் சொல்லியனுப்புகிறேன்" என்று கூறி திருப்பி அனுப்பிவிட்டார்.

ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரியவில்லை என்ற ஒரே காரணத்திற்காக ஓர் அரிய வாய்ப்பு கை நழுவிப் போகிறதே என்று எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது.

ஒருநாள் வாரப் பத்திரிகை ஒன்றைப் புரட்டும் போது அதில் "மெஸ் ரூபா ஜெகன் ஸ்பீக்கிங்" என்ற தலைப்பில் திருமதி. ரூபா ஜெகன் அவர்கள் விவேகானந்தா கல்வி நிலையத்தில் தபால் மூலம் ஆங்கிலம் சரளமாகப் பேசப் பயிற்சி பெற்ற செய்தி வெளியாகியிருந்தது.

இப்பயிற்சியில் சேர்ந்தால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியும் என்ற நம்பிக்கை எனக்குள் துளிர் விட்டது.

என் தந்தையின் அனுமதி பெற்று நானும் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

ஓர் ஆசிரியர் எதிரில் இருந்து பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதைப் போல, பயிற்சி மிகவும் எளிய முறையில் அமைந்திருந்ததால் மிகுந்த ஆர்வத்துடன் இப்பயிற்சியினை மேற்கொண்டேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது ஆங்கிலத்தில் பயமின்றி சரளமாகப் பேச முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசத் தெரியாத காரணத்தினால் எந்த வேலை எனக்குத் தர மறுக்கப்பட்டதோ, அதே ரிஸப்ஷனிஸ்ட் வேலை எனக்கு வேறு ஒரு பிரபல நிறுவனத்தில் கிடைத்துள்ளது.

"THE INSTITUTE'S COACHING IS SIMPLY SUPERB."

நீங்களும் தபால் மூலம் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு. நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

விவேகானந்தா கல்வி நிலையம்
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை-600 017.

NAGA

வெளிநாட்டு மாணவர்களுக்கென விசேஷ வெளிநாட்டு சேவைப் பிரிவும் இயங்கி வருகிறது.

# தடங்கல் பண்ணும் டங்க்கல் அறிக்கை!

**டங்க்கல் அறிக்கையாமே? அது என்ன? அது நம்மை எப்படி பாதிக்கிறது?**
**டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதனைக் கேட்ட போது விளக்கம் தந்தார் :**

''வர்த்தக ரீதியான சில பிரச்னைகள் ஐரோப்பிய நாடுகளுக்கும், அமெரிக்கா, ஜப்பான் போன்ற இதர முன்னேறிய நாடுகளுக்கும் இடையே முற்றி வலுவடைந்தது. அப்போது, நடுநிலையான ஓர் அறிக்கையைத் தயார் செய்யச் சொல்லி இந்த நாடுகள் ஆர்தர் டங்கல் என்பவரைக் கேட்டுக் கொண்டன. அதுதான் டங்க்கல் அறிக்கை. இவர், GATT என்று சுருக்கமாக அழைக்கப்படும் (ஜெனரல் அக்ரிமென்ட் ஆன் டாரிஃப் அன்ட் டிரேட்) அமைப்பின் டைரக்டர் ஜெனரல்.

''டங்க்கல் அறிக்கையின் முக்கிய மூன்று அம்சங்கள் : 1. பொருட்களின் தரம்; 2. உத்தரவாதமான (நடுவில் கழன்று கொள்ளாத) சப்ளை; 3. விலையை, பிறரோடு போட்டியிடும் அளவுக்கு நிர்ணயித்தல்.

''ஆனால் அந்த அறிக்கை சம்பந்தப்பட்ட நாடுகளுக்குத் திருப்தி அளிக்கவில்லை!''

''ஏன்?''

''ஐரோப்பிய நாடுகளும், ஜப்பானும் வட அமெரிக்காவும் எக்கச்சக்க மான்யம் கொடுத்துத் தங்கள் தயாரிப்புகளின் விலையைக் கணிசமாகக் குறைத்து உலகச் சந்தையில் அதிக அளவு இடத்தைப் பிடித்து வந்தன. இதை டங்க்கல் அறிக்கை தடை செய்தது. சம்பந்தப்பட்ட நாடுகள் இதை ஒப்புக் கொள்ளவில்லை!''

''சரி, டங்க்கல் அறிக்கையால் நம் நாட்டுக்குப் பாதிப்பு உண்டா?''

''டங்க்கல் பணக்கார - வளர்ச்சி அடைந்த நாடுகளுக்கு இடையேயான பிரச்னையைத் தீர்த்து வைக்க முயன்றிருக்கிறார். இந்தக் களேபரத்தில் வளரும் நாடுகளும் அவஸ்தைப்படத்தான் செய்கின்றன.''

''எப்படி?''

''டெக்னாலஜி எனும் தொழில் நுட்ப அறிவு; டிரெயினிங் எனப்படும் பயிற்சி; டிரேட் எனும் வாணிபம் - இந்த மூன்று 'T'களும்தான் இயந்திர மயமாகிப் போன நாடுகளின் செழிப்புக்கு அடிப்படைக் காரணங்கள். 'இன்டெலக்சுவல் பிராப்பர்ட்டி ரைட்ஸ்' அடிப்படையில், தங்கள் மூளையைப் பயன்படுத்தி உருவாக்கிய பொருட்களுக்கு 'பேடன்ட்' உரிமை முறையை இவர்கள் வலியுறுத்துகிறார்கள். இதை TRIPS (Trade Related Intellectual Property Rights) என்பார்கள்.


* எம்.எஸ். சுவாமிநாதன்

''அடுத்தது சப்ஸிடி எனப்படும் மான்யம். ஐரோப்பிய நாடுகளிலாகட்டும், அமெரிக்காவில் ஆகட்டும், அவர்கள் கொடுக்கும் மான்யம், ஐந்து லட்ச ரூபாய் என்றால், நாம் நம் விவசாயிகளுக்குக் கொடுப்பது ஆயிரம், ஆயிரத்து இருநூறு ரூபாய்தான். எக்கச் சக்க மான்யம் பெறும் அயல் நாட்டு உற்பத்தியாளர்கள் தங்கள் தயாரிப்புகளை உலகச் சந்தையில் குறைந்த விலைக்கு விற்கிறார்கள். நம்மால் போட்டியிட முடிவதில்லை. அவர்கள் மான்யத்தை அறவே எடுத்து விடட்டும். அப்புறம் நம்மோடு (அல்லது பிற நாடுகளோடு) போட்டியிடட்டும்! இப்படிச் செய்தால் தோல் பொருட்கள், ஜவுளி வகைகள் விவசாயப் பொருட்கள், எல்லாவற்றிலும் கூட நமக்குச் சாதகமாகப் போய்விடும்! விதிமுறைகள் எல்லாருக்கும் பாரபட்சமின்றிக் கடைபிடிக்கப்படும் பட்சத்தில், போட்டி சமமானதாக இருக்கும்.''

''அதாவது எந்த நாடுமே தங்கள் தயாரிப்புக்களுக்கு மானியமே கொடுக்காதிருந்தால், நம் தயாரிப்புக்கள் உலகச் சந்தையில் விலை குறைச்சலாக இருந்து அதிகப் பங்கைப் பெற முடியும்!''

''ஆமாம். அதே போல எண் 301 என்ற விதித் திணிப்பு இருக்கிறது. ரொம்ப வேண்



''எறும்பூரக் கல்லும் தேயும்ங்கிறதை நேரில் பார்த்துத் தெரிஞ்சுக்கிட்டேன் முதலாளி!''

''எப்படி சொல்றே?''

''நம்ம ஹோட்டல் மைசூர் பாகுல எறும்பு மொய்ச்சுக் கரைந்து போயி டுத்து!''

– காஜிசாமா

டப்பட்ட நாடு என்று-பாகுபாடு செய்கிறார்கள். இப்படி சில நாடுகளுக்கு மட்டும் சலுகை காட்டாமல் இருந்தால் நல்லது. தவிர, 'கண்டுபிடிப்பு உரிமை' எனப்படும் 'பேடன்ட்' விவகாரம், விவசாயத்துறையிலும், மருந்துகள் துறையிலும் நமக்குப் பாதகமாய் இருக்கும். அதாவது ஒரு மருந்து அல்லது புது ரக வீரிய விதை போன்றவை கண்டு பிடிக்கப் பட்டால் அதைப் பயன்படுத்தும் நாடுகள் பேடன்ட் உரிமை உள்ள நாடுகளுக்கு எக்கச்சக்க ராயல்டி பணம் தர வேண்டும்.''

'''சுதந்திர வர்த்தகம் வேண்டும்' என்று நம்மைப் பார்த்து உபதேசிக்கிறார்கள். ஆனால் அவர்களே சுயநலத்தோடுதான் நடந்து கொள்கிறார்கள் போல!''

''அதோடு சட்டாம்பிள்ளைத்தனமான உத்தரவுகள் போடுகிறார்கள். அணு ஆயுத ஒழிப்புச் சட்டத்தில் (NPT) கையெழுத்திட வேண்டும். அதில் கையெழுத்துப் போட்டால்தான் உன்னுடன் வியாபாரம் செய்வேன் என்றெல்லாம் அதிகாரம் பண்ணுகிறார்கள்!''

''ஏற்றுமதி வர்த்தகத்தில் இத்தனை இடையூறுகளா?''

''அரசியல் தலைவர்கள். 'குறைந்த பட்சமாய் இறக்குமதி செய்து அடக்கமாக வாழுங்கள்' என்றார் காந்திஜி. அதைப் பின்பற்றினாலே போதும்; நாமும் முன்னேறலாம்; செல்வச் செழிப்பு மிக்க நாட்டினரும் இறங்கி வருவார்கள்!''

– சாருகேசி












**வடக்கு வாசல் :**

# கதவடைப்பை விரும்பாத ஒரு தலைவர்!

'தில்லி வியாபார் மகாசங்' விற்பனை வரி ஏற்றத்தை எதிர்த்து பிப். 19 -ஆம் நாள் எல்லா மொத்த வியாபாரிகளின் கடைகளும் அடைக்கப் படும் என்று அறிவித்தது! ஷாதராவின் உற்பத்தியாளர் சங்கம் இந்த எதிர்ப்பிலிருந்து தான் விலகுவதாக அறிவித்தது! ''தில்லியில் 85,000 சிறிதும் பெரிதுமான தொழில்கள் நடக்கின்றன. பொழுது விடிந்தால் ஒரு பந்த், ஒரு ஹர்தால் என்று அரசியல் கட்சிகள் இவற்றைக் கேலிக்கூத்தாக ஆக்கி விட்டன. நாங்கள் இத்தகைய பந்த்களில் சேர மாட்டோம்'' என்றார் இதன் தலைவர்!

## காவல் துறையின் கண்காட்சி

கள்ள நோட்டுத் தயாரிக்கும் இயந்திரங்கள்; கள்ளக் கடத்தலுக்குப் பயன்பட்ட விதம் விதமான உபகரணங்கள்; வி.ஐ.பி.க்கள் கள்ளக் கையெழுத்திட்டு மோசடி செய்ய முனைந்த போது பிடிக்கப்பட்ட ஆவணங்கள் எனப் பலவித ஆர்வத்தைத் தூண்டும் பொருள்கள் நேரு ஸ்டேடியத்தில் உள்ள போலீஸ் மியூசியத்தில் வைக்கப் பட்டுள்ளன. மகாத்மா காந்தியைச் கட்டுக் கொன்ற நாதுராம் கோட்ஸே மீது போலீஸார் பதிவு செய்த வழக்கேடு (FIR) சக்கரவர்த்தி ஷாஜஹானின் கை ரேகைகள் எவச் சரித்திர நிகழ்ச்சிகளை ஞாபகமூட்டும் பொருள்களும் உள்ளன. குற்றங்கள் மண்டிய இவ்வுலகில் போலீஸ் துறை எவ்வளவு தூரம் முயற்சிகள் எடுத்துக் குற்றங்களைத் துப்பறிகிறது என்பது இங்கு விளக்கப்படுகிறது. தில்லி வருபவர்கள் அவசியம் பார்க்க வேண்டிய ஒ ன் ற ா க த் திகழ்கிறது இந்த போலீஸ் மியூசியம்!

## வருபவை 'வெள்ளி தினங்கள்'!

ஒருவர் வெளிநாட்டில் 6 மாதங்கள் தங்கியிருந்தால் 100 கிலோ வெள்ளி கொண்டு வர அனுமதி உண்டு. வளைகுடா நாடுகளிலிருந்து வரும் தென்னிந்தியர்கள் இப்போதெல்லாம் தில்லி வழியாக வருவதையே விரும்புகின்றனர். ஏனெனில் இங்கு எவ்வளவு வெள்ளி கொண்டு வந்தாலும் வாங்கிக் கொள்ள ஆட்கள் உண்டு. வெள்ளி இடைத் தரகர்கள் ஏர்போர்ட் அருகேயே இவர்களை எதிர்கொண்டு அத்தனை வெள்ளியையும் வாங்கிக் கொண்டு விடுகின்றனர்!

## பார்சல் திருடர்கள்!

ஏற்றுமதிக்கு அனுப்பப்படும் ஏர் பார்சல்களைத் திட்டமிட்டுத் திருடியதற்காக நான்கு ஏர் இந்தியா ஊழியர்களையும்,

● விமானப் பார்சல் திருடர்களிடமிருந்து பிடிபட்ட பொருள்களுடன் போலீஸ் அதிகாரி



## பட விளையாட்டு-1 போட்டி முடிவு

சொல் விளையாட்டை விட்டு விட்டுப் படவிளையாட்டுக்குத் தாவியதற்காக நம் மீது பல வாசகர்கள் பாய்ந்தார் களே தவிர, முன்னதை விடவும் பின்னது மிகவும் சிரமமானது என்பதை மொத்தம் பதினோரு சரியான விடைகள் மட்டுமே வந்துள்ளது நிரூபிக்கிறது!

சரியான விடைகள் :

1. வைஜயந்திமாலா
2. விஜயசாந்தி
3. எம். என். ராஜம்
4. ஸ்ரீவித்யா

பரிசுத் தொகையை ரூ 25/- கூட்டி, கீழ்க்கண்ட பதினோரு பேருக்கும் தலா ரூ 25/- அனுப்பி வைக்கிறோம்.

1. வி. எஸ். ஆனந்தி, 58, போலீஸ் கமிஷனர்ஸ் ஆபீஸ் சாலை, எக்மோர், சென்னை - 600 008.

2. வே. ஸ்வர்ணா, 151, காமராஜர் சாலை, எஸ்.வி.எஸ். மாவு மில், மதுரை - 625 009.

3. ஏ. ஆர். ராமநாராயணன், ஜி. 54, 12வது தெரு, அண்ணா நகர் (கிழக்கு), சென்னை - 600 102.

4. கே. மாலதி குமார், சி-35, 12வது குறுக்குத் தெரு, இந்து காலனி, நங்க நல்லூர், சென்னை - 600 061.

5. த. கருணா, 13, முதல் தெரு, ஸ்ரீராம் நகர், டி.டி.டி.ஐ., தரமணி, சென்னை - 600 113.

6. ஆ. க. ஜான்சி, 70, வெளிப் பேட்டைத் தெரு, தருமபுரி - 636 702.

7. ப. பாண்டியராஜன், 218, வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு, சென்னை - 600047.

8. ஆர். பானுமதி, 11/1-5 பிள்ளையார் கோவில் தெரு,தேவாங்கபுரம், பள்ளி பாளையம், ஈரோடு - 6.

9. நா. பானுமதி, ஆனந்தா ஆயில் ஸ்டோர், சேலம் மெயின் ரோடு, சின்ன சேலம், கள்ளக்குறிச்சி (தாலுக்கா) - 606 201.

10. பி. மீனாக்ஷி, 310 சோம்வார் பெட், பூனா - 11, மஹாராஷ்டிரா.

11. எஸ். திலகவதி, 15/ஏ, டாக்கர் சாலை, உறையூர், திருச்சி - 3.

ஒரு இந்தியன் ஏர்லைன்ஸ் ஊழியரையும் டெல்லி போலீஸ் கைது செய்திருக்கிறது. இவர்கள் சாமான்களை கோ-டவுனிலிருந்து டிராலிகளில் ஏற்றிக் கொண்டு விமானத்தில் ஏற்றுவதற்குச் செல்லும் போது வழியில் புதர்களில் ஓரிரு பார்சல்களை ஒளித்து வைத்து விடுவார்கள். பின்னர் அவற்றை விற்றுப் பங்கு போட்டுக் கொண்டு வந்தனர்! இப்படியே கடந்த மூன்று ஆண்டுகளுக்கு மேலாகச் செயல்பட்டு வந்ததாகத் தெரிகிறது. இவர்கள் கைதான போது பிடிபட்ட பொருள்களின் மதிப்பு 25 லட்சம்!

### மோட்டார் சைக்கிள் டாக்சி!

டில்லியில் மோட்டார் சைக்கிள் டாக்சிகள் அமைக்கும் திட்டம் அமலபடுத் தப்படவிருக்கிறது. ஒரேயொரு நபருக்கு டிக்கெட் கொடுத்து அவரை 'பில்லியனில்' அமர வைத்து ஏற்றிச் செல்லும் திட்டம் இது. இன்னும் ஆறு மாதங்களில் 500 பேருக்கு லைசென்ஸுகள் கொடுக்கப் படும். இப்போது ஓர் ஒழுங்கு முறையின்றி ஓடிக் கொண்டிருக்கும் ஆட்டோ ரிக்ஷாக் களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. இந்தப் புது வாகனங்களாவது சட்டத்திற்கு உட்பட்டுச் செயல்படுமா என்று பார்க்க வேண்டும்!

### போலீஸைத் துரத்தி அடித்த பூங்கா!

டில்லி மாநகரின் வடமேற்கில் அமைந்த அசோக் விஹார் வாசிகளுக்கு அங்குள்ள பூங்காவால் ஒரு பிரச்னை. நூற்றுக்கணக்கானவர்களால், இது ஒரு பொதுக் கழிப்பறையாக மாற்றப்பட்டது. இது ஏற்படும் துர்நாற்றம் தாங்காமல் இவர்கள் கார்ப்பரேஷனுக்கும், போலீஸுக் கும் புகார் கொடுக்க, அந்தப் பார்க்கில் ஒரு போலீஸ் செக்போஸ்ட் அமைக்கப்பட்டது. அதற்குக் காலனிவாசிகளே பணமும் திரட்டிக் கொடுத்தார்கள். அதில் ஓரிரு தினங்களே இருந்த போலீஸார், நாற்றம் தாங்காமல் ஓடியே விட்டனர்! இப்போது விஷயம் கார்ப்பரேஷனுக்கு எதிராக ஒரு வழக்காக ஹைகோர்ட் வரை போயிருக் கிறது!

– ராஜீவி நரசிம்மன்

# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.

THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | $\frac{1}{2}$ % |
| 24 | 18 % | 1 % |
| 36 | 19 % | $1\frac{1}{2}$ % |
| 60 | 20 % | 2 % |

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | $\frac{1}{2}$ % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| 1000 | 45 | 2025 | $1\frac{1}{2}$ % |
| 1000 | 67 | 3025 | 2 % |

### HIGHLIGHTS:

- * Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
- * **Company is in 20th year of Service.**
- * Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
- * No tax deduction at source if the fixed deposit holders submits 15 H in case. For any financial year interest exceeds Rs. 2500/-.
- * Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
- * Pre-mature repayment facility as per terms and conditions
- * Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
- * Transaction with members only. (Rupees Two only for Membership.)

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
|---|---|---|---|---|---|---|
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | TUESDAY |

**K. R. V. RAMANI**
President

**G. KUMARAVELU**
Vice-President

**P. S. SAMBASIVAM**
Secretary



* வி.எச்.எஸ்.ஸில்....

னைக் கொண்டு வந்து சேர்த்தனர். அந்த நேரத்தில் பெரிய டாக்டர்கள் இல்லை. எண்பது வயதான எனக்குச் சகல உதவி களையும் செய்து, இரவு முழுக்க பார்த்துக் கொண்ட நர்சுகள் இருவரை என்னால் மறக்கவே முடியாது... தொழில் ரீதியான பணியே இல்லை அது... ஆத்மார்த்தமான சேவை... உடம்பு குணமாகி என்னால் பழையபடி நடக்க முடிகிறது என்றால் அன்றிரவு அந்த நர்சுகள் அளித்த மன உறுதியும் நம்பிக்கையும்தான் காரணம்!''

ஜெயம்மாளைப் போல் ஆயிர மாயிரம் நோயாளிகள்! நர்சுகளை நன்றி யுடன் நினைவுகூரக் கூடும்... ஆனால் நர்சு கள் தங்கள் பணி பற்றி என்ன நினைக் கிறார்கள்?

சென்னை அடையாறு 'வாலண்டரி ஹெல்த் சர்வீஸஸ்' மருத்துவ மனையில் பணியாற்றும் சீனியர் நர்ஸ் ஜி. பத்மாவதி சொல்வதைக் கேளுங்கள் :

''எனது இருபத்தியோராவது வயதில்

# மருத்துவர்களுக்கு

'கை விளக்கேந்திய காரிகை' என்று ஐந்தாம் வகுப்பு படிக்கும் போது பிளாரென்ஸ் நைட்டிங்கேல் அம்மை யாரின் செவிலியர் (நர்ஸ்) பணி பற்றிப் படித்திருக்கிறோம். இன்று கைவிளக்குக்கு அவசியமில்லை. ஆனால் நைட்டிங்கேலின் சேவை மனப்பான்மைக்கு அவசியம் தொடர்கிறது; அதிகரித்துள்ளது என்று கூடச் சொல்லலாம். தொண்ணூறு வயது வரை சேவை செய்த நைட்டிங்கேல் எழுதிய 'செவிலியர் கடமை' என்ற நூல் இன்றும் உலகெங்கும் செவிலியர் பயிற் சிக்கு அடிப்படையாக விளங்குகிறது. நர்சுகள் நடைமுறையில் எப்படி பணி செய்கிறார்கள்?

மதுராந்தகம் சமீபம் ஒரத்தி எனும் குக்கிராமத் தில் தனிமையில் வசிக்கும் மூதாட்டி ஜெயம்மாள் சொல்கிறார் :

''நள்ளிரவு. திடீ ரென்று கால்கள் இரண்டி லும் பாரிச வாயு மாதிரி இழுப்பு ஏற்பட்டு நடக்க முடியாமல் போனது. போரூர் ஸ்ரீராமசந்திரா மருத்துவ மனையில் என்

கணவனை இழந்து விட்டேன். அப்போது எனக்கு ஒன்றரை வயதில் ஒரு பிள்ளை. எதிர்காலம் ஒரு கேள்விக்குறியாக அமைந் தது. கணவர் வேலை பார்த்த அஞ்சல் இலா காவில் வேலை கிடைக்கப் போதுமான படிப்பு எனக்கு இல்லை. நர்ஸ் ஆக வேண் டும் என்று ஆர்வம் ஏற்பட்டுவிட்டது. அன்று மூன்றரை வருட செவிலியர் டிப் ளமா படிப்பு படிக்க எஸ்.எஸ்.எல்.சி படிப்பு அவசியம் தேவை. அதனால் முதலில் பள்ளியில் சேர்ந்து எட்டாம் வகுப்பிலிருந்து எஸ்.எஸ்.எல்.சி வரை

* .... கனிவான சேவை



# உதவும் மந்திரக் கரங்கள்!



* டாக்டர் ராஜூ



* ராமகிருஷ்ணன்

படித்தேன். பிறகு செவிலியர் டிப்ளமா படிப்பு சேர்ந்தேன்.

அந்தக் காலத்தில் விதவைகள் வெளியே வருவதும், குடும்ப விசேஷங்களில் கலந்து கொள்வதும், ஆண்களுடன் பேசுவதும் பெரிய குற்றம் போல் கருதப்பட்டது.

''இந்த அபத்தமான கருத்தை உடைக்கும் போதே சமுதாயப் பணியும் ஆற்ற முடியும் என்பதால்தான் செவிலியர் துறையைத் தேர்ந்தெடுத்தேன்!'' வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெற்ற திருப்தியுடன் சொல்கிறார் பத்மாவதி.

அடிப்படை ஆர்வத்துடன் இந்தத் தொழிலுக்கு வருபவர்கள்தான் சிறப்பான சேவை செய்ய முடியும். ஆனால் அந்த ஈடுபாடே உணர்ச்சிவசப்படும் அளவுக்கு இருக்கக் கூடாது. பத்மாவதி மேலும் சொல்கிறார் :

''செவிலியர் பணியில் ஈடுபடும் போது எந்தவித உறவையும், நெருக்கத்தையும் நோயாளிகளுடன் வளர்த்துக் கொள்ள மாட்டேன். சிகிச்சை முடிந்து நோயாளிகள் வெளிச் செல்வதும், சிகிச்சை பலனளிக்காமல் ஓரிரு நோயாளிகள் மரணமடைவதும் என்னைப் பாதிப்பதில்லை.

''ஒரு பெண் நோயாளி, கணவனுடன் ஏற்பட்ட மனத்தாங்கல் காரணமாக இரவில் மருத்துவமனையிலேயே தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து விட்டாள். டாக்டருடன் கூடச் சென்று சடலத்தை நான்தான் இறக்கினேன். இத்தகைய நிகழ்ச்சிகள் நம்மைப் பாதிக்க அனுமதித்தால் தொடர்ந்து எப்படி பணிகளைச் சிறப்பாகச் செய்ய முடியும்?''



* பத்மாவதி

பெரும்பாலும் பெண்கள்தான் நர்சுகளாக வேலை பார்க்கிறார்கள். அழகான நர்சுகளைப் பற்றித் தரக்குறைவான ஜோக்குகள் எழுதப்படுகின்றன. ஆனால் நடைமுறை எப்படி.....?

ஆரம்ப கால கட்டத்தில் ஆண் நோயாளிகளைத் தொடும்போது கூச்ச உணர்வும், ஒருவித கலக்கமும் மனத்தில் நேர்வதுண்டு. கொஞ்ச நாளில் மனம் பதமாகி விட்டது'' என்கிறார் பத்மாவதி.

"மருத்துவத் துறைக்குப் போக வேண்டும் என்று எனக்கு ஆர்வம். ஆனால் டாக்டர் படிப்புக்குத் தேவையான மதிப் பெண்கள் இல்லை. அதனால் நர்சிங் டிப் ளமா படிப்பில் சேர்ந்து பயிற்சி பெற்றேன். முதல் வருடம் முடியும் வரை படிப்பை விட்டு விடலாமா என்று கூட அடிக்கடி தோன்றியது. ஆண் நோயாளிகளைத் தொடு வதும், பயிற்சியின் தன்மையும் என்னுள் இத்தகைய பாதிப்பை ஏற்படுத்தின'' என் கிறார் தங்கலீலா செல்லப்பாயம். ''ஆனால் நாளடைவில் மனம் மாறிவிட்டது. இன்று எனக்கு இந்தத் தொழில்தான் முழு மனத் திருப்தி அளிக்கிறது.''

இவரது கணவர் இவருக்கு முழு ஒத் துழைப்புத் தருகிறாராம். ''நர்சு வேலை பார்ப்பவர்களுக்குக் கல்யாணமாவது கஷ்டம் என்பதெல்லாம் பழைய கதை. இப் போது மனப்பக்குவம் வளர்ந்துவிட்டது'' என்கிறார்.

வி.எச்.எஸ்.வின் தீவிர சிகிச்சை பிரிவில் பணியாற்றும் பூங்கோதை, சிறு நீரக டயாலிஸிஸ் துறையில் பணியாற்றும் ஜெயந்தி, லீமா ரோஸ் ஆகிய செவிலியர் களின் சேவை எந்த அளவுக்குத் தேர்ச்சி யானது என்பதை நேரில் கண்டு உணர முடிந்தது.

''இவர்கள் மட்டுமல்ல... இங்கு பணி யாற்றும் அத்தனை செவிலியருமே இந் நிறுவனம், மத்தியதர வகுப்பினருக்குக் குறைந்த செலவில் தரமான சிகிச்சையை அளிக்க உருவானது என்பதை உணர்ந்து, சேவை மனப்பான்மையுடன் பணி புரிகின் றனர்'' என்று குறிப்பிட்டார் மருத்துவ சூப்பரின்டென்டென்டாக இருக்கும் டாக்டர் சரோஜா ஸ்ரீனிவாசன்.

மகப்பேறு மருத்துவத்தில் செவிலி யரின் பங்கு அதிகம். ''கருத்தரித்த நாளி லிருந்து பிள்ளைப் பேறு நிகழும் வரை ஒவ் வொரு கர்ப்பிணிப் பெண்ணிடமும் பழகி, உடல் நிலையை அவ்வப்போது பரிசோ தித்து, அவர்களது மனத்தில் தைரியத்தை யும், பிள்ளைப் பேறைச் சந்திக்கும் மன உறுதியையும் தோற்றுவிக்க, தேர்ச்சி பெற்ற செவிலியர் பெரிதும் உதவ முடி கிறது. மகப்பேறு சமயத்தில் முழுக்க முழுக்க நோயாளியுடன் இருந்து கவனித் துக் கொண்டு மருத்துவருக்கும் நோயாளிக் கும் இடையே பாலமாய்ச் செயல்படுவது செவிலியர் தான்'' என்கிறார் டாக்டர் சூர்ய கலா.

'மகப்பேறு பிரிவு நர்சுகள் பல சமயங் களில் கொடூரமாக நடந்து கொள்கிறார்கள்' என்று நாம் கேள்விப்பட்டதைச் சொன் னால்....

''அதெல்லாம் ஒன்றும் இல்லை! பல பெண்கள் பயம் காரணமாக ஒத்துழைக்க மறுப்பார்கள். அவர்கள் நலனுக்காக அவர் களைச் சற்று அதட்டித்தான் ஒத்துழைப்புப் பெற வேண்டும். மேலும் பிரசவ வலி அனு பவித்தே தீர வேண்டிய ஒன்று. ரொம்ப அனுதாபப்பட்டால் சுய பச்சாத்தாபம் தான் வளருமேயொழிய தாய்க்கு மனத் துணிவு உண்டாகாது. கண்டிப்பும் பரிவும் சரியான விகிதத்தில் கலந்து பயன்படுத்துவோம்'' என்கிறார் சரளா.

இவர் செவிலியர் பணியில் 15 வருஷ அனுபவம் பெற்று செவிலியர் இணைப்பாள ராக (Nursing Co-ordinator) சூர்யா ஆஸ்பத்தி ரியில் பணியாற்றுகிறார். ராணுவத்திலும் மேல் நாடுகளிலும் கூடப் பணியாற்றிய அனுபவம் இவருக்கு உண்டு.

''மேல் நாடுகளில் பயிற்சி அதிகம். செவிலியருக்கு மரியாதையும், வாய்ப்பு களும், வருமானமும் அதிகம். தற்போது நம் நாட்டிலும் அத்தகைய மனப்பான்மை வளர்ந்து வருகிறது. இத்துறையில் முறை யான படிப்பும், தேர்ச்சியும் பெற்றவர் களுக்கு அயல் நாடுகளில் இன்று தேவை அதிகம் உள்ளது'' என் கிறார் சரளா.

''ஒரு நோயாளி இறக் கும் தறுவாயில் தொண் டையில் சளி சேர்ந்து மூச்சு விட முடியாது சிரமப்பட் டார். ஏதோ சொல்ல விருப்பம். குரல் வர வில்லை. Suction முறை யில் சளியைச் சற்று விடு படச் செய்தேன். 'God Bless You' என்றார். அவைதாம் அவரது கடைசி வார்த்தை கள்'' என்று தமது அனுப வம் ஒன்றையும் தெரிவிக் கிறார் சரளா.

தங்கள் மந்திரக் கரங் களால் நோயாளிகளுக்கு இதமளிப்பதோடு மருத்து

✱ பயிற்சி வகுப்பு



# ஆத்மாக்களுக்கு ஜாதி இல்லை

**ஜாதி இல்லை என்று சொல்ல முடியாது**
**ஆனால் பார்வையில் சமநோக்கு வேண்டும்.**



1. மலர்களில் எத்தனை ஜாதி?
2. பழங்களில் எத்தனை ஜாதி?
3. ஈ, எறும்புகளில் எத்தனை ஜாதி?





எல்லா ஜீவன்களிலும் ஒரே ஆத்மா தான் குடி கொண்டிருக்கிறது. ஆத்மாக்களுக்கு ஜாதி இல்லை.



ஆதலால் நல்லோர்களை காப்பாற்றி அவர்களுக்கு கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி விநியோகியுங்கள்.

திருமண வைபவங்களுக்கு:-
சீர்முறுக்கு, சீர் அதிரசம், முள்ளுத்தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால், அப்பம் முதலியன.

Sauthy

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020
போன்: 412557



* சௌதாமினி சந்திரன்



* தங்கலீலா செல்லப்பாபயம்

வர்களுக்கும் உதவ வேண்டும் நர்சுகள். ஆபரேஷன் தியேட்டரில் தேவைக்கு ஏற்றபடி அவ்வப் போது சரியான உபகரணங்களை எடுத்துக் கொடுத்தும் திரும்பப் பெற்றும் ஒத்துழைப்பது நர்சுகளே. ஒரு நோயாளிக்கு அவசரமாக டாக்டரின் கவனம் தேவைப் படுகிறதா என்பதை நிர்ணயித்து அவரைத் தாமதமின்றி வரவழைக்க வேண்டிய நர்ஸ், தேவையின்றியும் டாக்டரை அழைத்து தொந்தரவு தரக்கூடாது. சிறிய சிகிச்சைகளின் போது நோயாளியை அசையாமல் பிடித்துக் கொண்டு உதவுபவர்களும் நர்சுகளே. டாக்டர்களுக்கு முக்கியத்துவம் அளிக்கும் நாம் இவர்களுடைய இன்றியமையாத சேவையைச் சுலபமாகவே மறந்து விடுகிறோம்.

ஆனால் நம்மை இலேசில் மறக்க விடாமல் துரத்தி டிப்ஸ் வாங்கிக் கொள்ளும் நர்சுகளும் இருக்கத்தானே செய்கிறார்கள்...!

செவிலியர் துறை கல்வி முறைகளை அறிய, சென்னை மருத்துவக் கல்லூரி 'டீன்', டாக்டர் (மேஜர்) ராஜாவைச் சந்தித்தோம்.

''அரசு மருத்துவக் கல்லூரிகளும், தனியார் மருத்துவக் கல்லூரிகளும் செவிலியர் டிப்ளமா பயிற்சி, செவிலியர் பி.எஸ்ஸி பட்டப்படிப்பு ஆகியவை நடத்துகின்றன. +2 பாஸ் செய்து முக்கிய பாடங்களில் 60 சதவீதம் பெற்றவர்கள் விண்ணப்பிக்கலாம்....'' என்றார் டாக்டர் ராஜா.

சென்னை மருத்துவக் கல்லூரியைச் சார்ந்த செவிலியர் கல்லூரியின் முதல்வர் சௌதாமினி சந்திரனைச் சந்தித்தோம். இவர் செவிலியர் பயிற்சியில் எம்.எஸ்ஸி படித்தவர். பேட்டியின் போது அங்கு Reader ஆகப் பணியாற்றும் ராமகிருஷ்ணனும் உடன் இருந்தார். இவரும் செவிலியர் பயிற்சியில் எம்.எஸ்ஸி படித்தவர். Ph.D பெற ஆராய்ச்சி செய்து வருகிறார்.

''ஆண்களும் செவிலியர் படிப்பில் சேர முடியும். சென்னை, பொது மருத்துவமனையில் இரு ஆண் செவிலியரும், கீழ்ப்பாக்கம் மன நோய் மருத்துவ மனையில் பல ஆண் செவிலியரும் பணியாற்றுகின்றனர். பாலுறவு நோய் துறை, மன நோய் சிகிச்சைத் துறை, தொழிலக மருத்துவ மனைகள் ஆகியவற்றில் ஆண் செவிலியர்களின் சேவை பெரிதும் உதவும்'' என்றார் ராமாகிருஷ்ணன்.

சௌதாமினி சந்திரன் செவிலியர் படிப்பின் மற்ற அம்சங்களை விளக்கினார்:

''செவிலியர் பள்ளியில் மூன்று ஆண்டுகள் படித்து டிப்ளமா பெறலாம். செவிலியர் கல்லூரியிலோ பி.எஸ்ஸி. பட்டப் படிப்பும், செவிலியர் டிப்ளமா முடித்தவர்களுக்குப் பத்துமாத உயர்மட்ட சிறப்புப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

''செவிலியர் பி.எஸ்ஸி. படிப்பு நான்கு ஆண்டுகள். மேலே எம்.எஸ்ஸி. படிப்பும் உண்டு. தற்போது இப்படிப்பு வேலூர் சி.எம்.சி. கல்லூரியில் உள்ளது. விரைவில் நாங்களும் தொடங்க உள்ளோம்.

''தமிழகத்தில் 1871 - ம் ஆண்டிலேயே முறையான செவிலியர் படிப்பு தொடங்கப்பட்டது. இரண்டு பேர்தான் முதலில் சேர்ந்தனர்! தற்போது டிப்ளமா, டிகிரி எல்லாவற்றிலும் சேர்த்து 500 பேருக்கு மேல் இங்கு படிக்கின்றனர். செவிலியர் டிப்ளமா, செவிலியர் பி.எஸ்ஸி இரண்டுக்குமே +2 அடிப்படைத் தேவை. ஆனால் பி.எஸ்ஸியில் சேர 17 வயது நிரம்பி, திருமணம் ஆகாதவராகவும் முக்கிய பாடங்களில் 60 மார்க்கு பெற்றவராகவும் இருக்க வேண்டும்.''

கல்லூரிகளில் செயல் முறைகளையும் மற்ற விஞ்ஞான விளக்கங்களையும் செவிலியருக்கு முழுமையாகப் போதிக்கலாம். ஆனால் ஒரு டாக்டர் டென்ஷனில் இருக்கும் போதோ, நோயாளி உடல் உபாதையினால் வெறுப்படைந்து கோபிக்கும் போதோ பொறுமை காக்க வேண்டும் என்பது போதனை மூலம் பெற முடியாத பண்பு. எந்த நிலையிலும் புன்னகை மாறாமல் செய் நேர்த்தி தவறாமல் திட உள்ளத்துடன் செயலாற்றும் செவிலியர்தாம் உண்மையில் வெற்றி கண்டவர்களாகிறார்கள்.

– நாயகன்

படங்கள் : கோபிநாத்



## ஆபீஸ் பையன்

# மிச்சம் பிரதமர்ஜி மிச்சம்!

இடம் : புது டெல்லி. பிரதமரின் இல்லம். ஆபீஸ் பையன் தயங்கித் தயங்கி உள்ளே நுழைகிறான். பிரதம மந்திரி நரசிம்ம ராவ், ஏற்கெனவே பல வகை எரிச்சல்களில் இருப்பவர், இவனைக் கண்டதும் இன்னும் எரிச்சல் அடைகிறார்.

*பிரதமர் : வந்திட்டியா? நீ ஒருத்தன்தான் பாக்கி!*

ஆபீஸ் பையன் : பிரதமர்ஜி கோபப்படக் கூடாது. உங்களைப் பாராட்டிட்டுப் போகலாம்னு வந்தேன்.

*பிரத : என்ன என்ன? பாராட்டா? பாராட்டுன்னாலே என்னன்னு மறந்து போச்சு. உட்கார், உட்கார்.*

ஆ. பை. : வேறே ஒன்னுமில்லே பிரதமர்ஜி. நாட்டிலே சமையல் கியாஸ் வைச்சிருக்கிறவங்களுக்கு மண்ணெண்ணெய் கொடுக்கப் போறதில்லேன்னு நீங்க ஒரு திட்டம் யோசனை பண்ணிட்டிருக்கிறதா பேப்பர்லே படிச்சேன். அதைப் போலவே இன்னும் சில திட்டங்கள் எனக்குத் தோணிச்சு. அதை உங்ககிட்டே சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்.

*பிரத : பலே பலே! பொறுப்புள்ள பிரஜைன்னா இப்படியல்ல இருக்கணும்? சொல்லு.*

ஆ. பை.: நாடு இப்ப இருக்கிற நிலைமையிலே இந்த மாதிரி சிக்கன நடவடிக்கை ரொம்ப முக்கியங்க. அதனாலே, ஒவ்வொரு கறிகாய் மார்க்கெட் வாசலிலும் காக்கி உடுப்புப் போட்ட ஆளை நிறுத்தணும்.

*பிரத : நிறுத்தி?*

ஆ. பை.: யாராச்சும் கத்தரிக்காய் வாங்கிட்டு வெண்டைக்காயும் வாங்கறாங்கன்னு வச்சுக்குங்க. நம்ம காக்கிச் சட்டை ஆள் உடனே வெண்டைக்காயைப் பறிச்சிடணும். வெண்டைக்காய்க்கு வெண்டைக்காயும் மிச்சம், அதைச் சமைக்கிறதுக்கான எண்ணெய், உளுத்தம் பருப்பு, தேங்காய், விறகு எல்லாம் மிச்சம்.

*பிரத : பலே, அப்புறம்?*

ஆ.பை.: எந்த ஆளாச்சும் பென்சிலும் வச்சுக்கிட்டுப் பேனாவும் வைச்சிருக்கான்னு வச்சுக்குங்க. ஒரு காக்கி உடுப்புப் போட்ட ஆள் இதைக் கண்காணிச்சு, 'உனக்குத்தான் பென்சில் இருக்கே, அப்பாலே பேனா எதுக்கு'ன்னு சொல்லிப் பிடுங்கிடணும்.

*பிரத : ஏன்? பென்சிலைப் பறிக்கக் கூடாதா?*

ஆ. பை.: பேனாவைப் பறிச்சா, கூடவே அதுக்குப் போடுற இங்க்கும் மிச்சமாகுமில்லே, பிரதமர்ஜி? மேலே கேளுங்க. எந்தக் கிழவராச்சும் கைத்தடியும் வச்சுக்கிட்டுக் கண்ணாடியும் வச்சிட்டிருந்தால், காக்கி உடுப்புப் போட்ட ஆள், 'கண்ணாடிதான் இருக்கே, அப்புறம் கைத்தடி எதுக்கு'ன்னு சொல்லி அதைப் பறிச்சிடணும்.

*பிரத : (தலையைச் சொறிந்தபடி) இதிலே நானும் மாட்டிப்பேனோன்னு தோணுது. பரவாயில்லே, மேலே சொல்லு.*

ஆ.பை.: அப்பாலே, யாரெல்லாம் ஸ்கூட்டரும் வச்சிக்கிட்டு, சைக்கிளும் வச்சிக்கிட்டிருக்கிறாங்கன்னு காக்கி உடுப்புப் போட்ட ஆளுங்க கண்காணிக்கணும். உடனே ஸ்கூட்டரைப் பறிச்சிடணும்.

*பிரத : ஏன் சைக்கிளைப் பறிக்கக் கூடாதா?*

ஆ.பை.: ஸ்கூட்டரைப் பறிச்சால் எவ்வளவு பெட்ரோல் மிச்சம்? அதைக் கவனியுங்க.

*பிரத : அதுவும் சரிதான். ஆனால் நானும் அப்போ பிடிக்கப் பார்க்கிறேன். எதுக்கெடுத்தாலும் 'காக்கி உடுப்புப் போட்ட ஆள்'னு சொல்றியே, அது ஏன்?*

ஆ.பை.: அதிலேயும் ஒரு சூட்சுமம் இருக்கு, பிரதமர்ஜி.

*பிரத : என்ன?*

ஆ.பை.: இப்படியெல்லாம் நாடு முச்சூடும் காக்கி உடுப்புப் போட்ட ஆளுங்க கண்காணிக்கணும்னா எத்தினி பேர் தேவைப்படும்?

*பிரத : (யோசித்து) இருபது லட்சம் பேர் தேவைப்படலாம்.*

ஆ. பை.: ஒவ்வொருத்தருக்கும் குறைஞ்ச பட்சம் ஐந்நூறு ரூபாய் சம்பளம் கொடுக்கிறதா வச்சுக்குங்க. எவ்வளவு ஆச்சு?

*பிரத : (மனதுக்குள் கணக்குப் போட்டு) : நூறு கோடி ரூபாய் ஆகும்.*

ஆ.பை.: அதேதான்! அவ்வளவு பேரண்டையும் சொல்லிடலாமில்லே?

*பிரத : என்னன்னு?*

ஆ.பை.: 'உங்களுக்குத்தான் காக்கி உடுப்புக் கொடுத்திருக்கிறேனே, அப்பாலே சம்பளம் வேறே எதுக்கு'ன்னு சொல்லி, அதைப் பறிச்சிடலாமில்லே! நூறு கோடி ரூபாய் மிச்சம், பிரதமர்ஜி.

*(பிரதமர் கண்களை மூடிக் கொண்டு சிந்தனை செய்யத் தொடங்குகிறார்.)*

– 'அவிட்டம்'




# கல்கி






1993

மார்ச் 7

மலர் : 51

இதழ் : 32

ஆங்கீரச

மாசி 24


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## நாயக்குக்குக் கல்தா!

## பவாருக்குக் குண்டு!

பம்பாயில் நடந்த கலவரங்களுக்குப் பிறகு நாயக்கின் ராஜினாமா எதிர்பார்க்கப்பட்ட ஒன்றுதான். ரொம்பக் காலதாமதமாக நடந்திருக்கிறது. கலவரங்களுக்கு நாயக் பொறுப்பல்ல என்பதுடன், கலவரங்களை காலா காலத்தில் அடக்காததற்கும் அவரை முழுப் பொறுப்பாளியாக்க முடியாது. மக்கள் உணர்ச்சிவசப்பட உருவாகும் கலவரத்துக்கும், திட்டமிடப்பட்ட கலவரத்துக்கும் வித்தியாசம் உண்டு. முன்னது பொங்கிய பால் நீர் தெளித்ததும் அடங்குவது போல் அடங்கக்கூடியது. பின்னது அப்படி அடங்காது. பம்பாயில் நடந்தது திட்டமிட்ட கலவரமே என்று கருதவும் இடமிருக்கிறது. உண்மை நிலவரம், இதற்கென்று நியமிக்கப்பட்டுள்ள விசாரணைக் கமிஷனின் தீர்ப்பு வெளியாகும் போதுதான் தெரியவரும். என்றாலும், கலவரம் ஒரு உச்ச கட்டத்தை அடைந்திருந்தது என்பதும் வரலாறு காணாத அளவில் பொருட்சேதமும் உயிர்ச் சேதமும் ஏற்பட்டது என்பதும் மறுக்க முடியாதவை. இதற்குத் தார்மிகப் பொறுப்பேற்றே நாயக் ராஜினாமா செய்திருக்கலாம். மேலும் திட்டமிட்ட சதி என்றாலும் அதை முன்கூட்டியே அறிய அரசின் உளவுத் துறை தவறி விட்டது என்பது நாயக்கின் ஆட்சித் திறனுக்குக் களங்கமே.

நாயக் ராஜினாமாவில் இன்னொரு சோக நாடகமும் உண்டு. அதுதான் பவார் கோஷ்டிக்கும் நாயக் கோஷ்டிக்கும் இடையே நடந்த மோதல். காங்கிரஸுக்குள் உட்பூசல் தொற்று நோய் போல் நாடெங்கும் பரவியிருக்கிறது. மகாராஷ்டிரம் விதிவிலக்கல்ல. வேடிக்கை என்னவென்றால், பவாரின் ஆசியோடுதான் இந்த நாயக் ஆட்சிக்கு வந்தார் என்பதுதான். பவார் தில்லி சென்ற பிறகு அவரது பிரதிநிதி போலிருந்து மகாராஷ்டிரத்தை ஆள்வதற்குப் பதில், பவாரின் மேலாண்மையிலிருந்து விடுபட்டுச் செயல்பட ஆரம்பித்தார். அப்போதே இவருக்குத் தலைவலி ஆரம்பமாகி விட்டது. மனக்கசப்பு வளர, பவாரின் ஆதரவாளர்களை இவர் அமைச்சரவையிலிருந்து நீக்க, பவார் இவருக்கு எதிராகத் தில்லியில் வேலை செய்ய.... ஆட்சி கலகலத்து விட்டது. ''காங்கிரஸ் கட்சியிலிருந்தே பவார் வெளியேற்றப்பட வேண்டும்'' என்று நாயக் ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார். பதவி எப்படியும் பறிபோகப் போகிறது என்பது உறுதியான நிலையில், கோப விரக்தியுடன் நாயக் வெளியிட்ட அறிக்கை அது.

நாயக்கைப் பதவி இறக்கம் செய்யப் பிரதமருக்கு இத்தனை காலதாமதமாகியிருக்கிறது. புதிய முதல்வரைத் தேர்ந்தெடுப்பதிலும் வழக்கம் போல் சாவகாசமாக இயங்குவார் என்று எதிர்பார்க்கலாம். இடைக்கால முதல்வராக விளங்கும் நாயக், இந்தக் காலகட்டத்தில் பங்காரப்பா போல் சில அற்பத்தனங்களில் ஈடுபடாமல் இருந்தால் சரி.

'வாலு போச்சு கத்தி வந்தது' என்பதற்கேற்ப, நாயக் போக இன்னொருவர் வரத்தான் போகிறார்; ஆட்சி என்று ஒன்று நடக்கத்தான் போகிறது. ஆனால், 'வாலை இழந்தது எப்படி?' என்று யோசிக்க விரும்புவோருக்கு நாயக் ராஜினாமா விவகாரம் இரண்டு பாடங்களைக் கற்பிக்கக்கூடும். (பாடம் கற்க யாரும் விரும்பவில்லை என்பது வேறு விஷயம்.) முதலாவது, பி.ஜே.பி. ஆண்ட மாநில அரசுகளை அதர்மமான முறையில் பதவி நீக்கம் செய்தது எவ்வளவு தவறு என்பதை உணர்த்தும். அங்கேயெல்லாம் 'அமைதி நிலவ முடியாது' என்ற ஒரு பொய்க் காரணம் காட்டிப் பழிவாங்கப் போக, மகாராஷ்டிரத்தில் நாயக்குக்குத் தலைவலி அன்றே ஆரம்பமாகி விட்டது. அமைதி குலையத் திட்டமிட்டு, தலைவலியை மண்டை இடியாக மாற்றத்தான் சற்று அவகாசம் தேவைப்பட்டது.

இரண்டாவது, காங்கிரஸுக்குள் உட்பூசல் இல்லாதிருந்தால் நாயக்கின் ஆட்சி நீடித்திருக்கும் என்பது மட்டுமல்ல; திறமையான நல்லாட்சியாகவும் திகழ்ந்திருக்கும். உட்கட்சி ஜனநாயகத்தில் கருத்துப் பரிமாற்றங்கள் நடந்து, தெளிவு பிறந்து, நல்ல யோசனைகள் ஏற்கப்பட்டு ஆட்சி செவ்வனே நடந்திருக்கும்; நிலையாகவும் இருந்திருக்கும். ஆனால் உட்கட்சி ஜனநாயகத்துக்கும் உட்கட்சிப் பூசலுக்கும் வித்தியாசம் தெரியாமல், இன்று கோஷ்டிப் பூசலே ஒரு ஜனநாயக உரிமை என்று எண்ணுகிற ஓர் அபத்த நிலை காங்கிரஸுக்குள் தோன்றி விட்டது. வேறு பல கட்சிகளிலும் இதே பரிதாப நிலைதான்.

## சித்திரை வெயிலில் செருப்பின்றி நடந்தது போல்...

◆ 'எங்கள் நையாண்டியான நாடகங்களை எப்போது பார்த்தாலும் ரசிக்கும்படியான சூழ்நிலையில் அரசியலை நடத்திக் கொண்டிருக்கும் அரசியல்வாதிகளுக்கு நாங்கள் ரொம்ப நன்றிக் கடன் பட்டவர்கள்' என்று சோ சொல்லியிருப்பது நூறு சதவிகித உண்மை! அவர் நாடகங்களில் நடித்துக் காட்டியதையே தூக்கிச் சாப்பிடும் அளவுக்குப் பல நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டிக் கொண்டு தானே இருக்கிறார்கள் நம் அரசியல்வாதிகள்.

திருச்சி - 2, சந்தனசபாபதி.

◆ திறமையான கல்லூரி மாணவர்களைக் கொண்ட ஒரு நாடகக் குழுவை உருவாக்கி அவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாகவாவது சோ அவர்கள் விளங்க வேண்டும்.

மதுரை - 2, ம. செந்தில்நாதன்.

◆ மாலவனுக்குக் காணிக்கை செலுத்துவதைக் காட்டிலும் மனித நேயமே உயர்வானது என்பதை 'அனுக்கிரகம்' சிறுகதையின் மூலம் அழகாக விளக்கிய ரிஷபனுக்கு மனமார்ந்த பாராட்டுக்கள்.

திருத்துறைப்பூண்டி, வி. என். ஜீவா.

◆ திருவாரூர் பாபுவின் சிறுகதையைப் படித்த போது சித்திரை வெயிலில் வெறும் காலோடு நடந்து சென்றது போல் இருந்தது.

அருகந்தம்பூண்டி, மலை அரசன்.

◆ 'அம்மாவுக்கு ஒரு மனு' சிறுகதை அருமை. கோட்டைக்குச் சென்றால் வீட்டுப் பிரச்னை கூட தீரும் என்று நம்பும் அப்பாவிகளின் அவலத்தை ஆசிரியர் அழகாகச் சுட்டிக்காட்டினார். இன்றைய நிஜ வாழ்க்கையின் பிரதிபலிப்பு!

ஆவடி, க. கோபி

◆ இந்தியாவின் மிகப் பெரிய மாநிலம் உத்தரப்பிரதேசம் எனவும் 56 மாவட்டங்கள் எனவும் வெளியாகியுள்ளது. இவை இரண்டும் தவறு. இந்தியாவில் பெரிய மாநிலம் மத்தியப் பிரதேசமே. மாவட்டங்கள் 63. உ.பிக்கு நான்காவது இடமே. ஆதாரம் மனோரமா இயர் புக் 1992.

தஞ்சை, டி.எஸ். மகாதேவன்.

◆ சுறாமீன்களின் பயன்களைப் பற்றிப் படிக்கும் போது நிச்சயம் மனித இனத்தால் அவற்றுக்குத் தொடர்ந்து ஆபத்து உண்டு என்பது தெள்ளத்தெளிவு. ஜப்பான் போன்ற நாடுகளில், 'கிரீன் பீஸ்' என்ற இயற்கை வளபாதுகாப்பு கமிட்டி, சுறா மீன் பிடிப்பதைத் தடைசெய்யப் பலமாகப் போராடி வருகிறது.

ஈரோடு, ஈ.டி. விஜயகுமார்.

◆ இந்தியக் கடலில் சுறா மீன்கள் என்ற தலைப்பைத் தவறுதலாக 'இந்திய அரசியலில் சுறா மீன்கள்' என்று படித்து விட்டேன்!"

தூத்துக்குடி - 1, என். சம்பத்.

◆ செங்கம் -மத்திய அரசுப் பண்ணையின் வளர்ச்சி அதிசயிக்க வைத்தது. நேருவின் கனவு மேலும் நிறைவேற, நடப்பு ஆண்டு மத்திய பட்ஜெட்டில் தோட்டக் கலைக்காக ஒதுக்கப்பட்டுள்ள ரூ. 50 கோடியைத் தமிழகம் உள்ளிட்ட அனைத்து மாநிலங்களிலும் உருப்படியாகச் செலவு செய்து, வேலை இல்லாத் திண்டாட்டத்தையும், உணவு பற்றாக்குறையையும் ஓரளவேனும் சமாளிக்க அரசு முன்வர வேண்டும்.

சென்னை - 23, கி. ராமதாஸ்.

◆ 'நேரத்தை வசப்படுத்து வெற்றி உன் கையில்' கட்டுரையில் எளிய, உபயோகமான யோசனைகள். உடனே செயல்படுத்தும் முகமாகத் தாமதிக்காமல் இக் கடிதத்தை எழுதி விட்டேன்.

தர்மபுரி, அவைநாயகன்.

◆ தலையங்கத்தில் முதல்வருக்கு எது கௌரவம் என்பதை எடுத்துக் கூறியுள்ளீர்கள். அம்மையார் தமது பார்வையைத் தொலை தூரத்துக்குத் தள்ளிச் செலுத்துகிறார். இனியொரு தேர்தல் வருமாயின் அதில் காங்கிரஸ் வெற்றி பெறாது, பி.ஜே.பி.தான் வெற்றி பெறும் என்று காண்கிறார். எனவேதான் உறவு மாறுகிறது. பி.ஜே.பி. பக்கமாகச் சரிகிறது. கொள்கைகளும், கோட்பாடுகளும் கொண்ட காங்கிரஸ் கட்சியே அவை அனைத்தையும் காற்றில் தூற்றி விட்டுச் செயல்படுகிற போது சூழ்நிலையால் முதல்வராகி விட்ட அம்மையாரிடம் என்ன கொள்கைப் பிடிப்பை எதிர்பார்க்க முடியும்?

சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

**வட்டமேஜை**



# திரு.வி.க.நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் : 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் அருகில்),
சென்னை - 600 082. போன் : 610390

பாரீஸ் கிளை : 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (கந்தசாமி கோயில் அருகில்),
சென்னை - 600 003. போன் : 565760

## டெபாசிட் திட்டங்கள்

### பென்ஷனர் டெபாசிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ.10,000 | 1 வருடம்<br>2 வருடங்கள்<br>3 வருடங்கள் | 21% |

★ இத்திட்டத்தின் கீழ் ஓய்வு பெற்றோர், 50 வயது அடைந்தோர், விதவைகள், உடல் ஊன முற்றோர் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளை களும் பயன் பெறலாம்

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்

★ வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### வைப்பு நிதி

| காலம் | வட்டி விகிதம் | |
|---|---|---|
| | ரூ.10,000 க்கு கீழ் | ரூ.10,000 மும் அதற்கு மேலும் |
| 1 வருடம் | 17% | 18% |
| 2 வருடங்கள் | 18% | 19% |
| 3 வருடங்கள் | 19% | 20% |

★ குறைந்த பட்ச டெபாசிட் ரூ.1,000

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்

★ குறைந்த பட்சம் ரூ.10,000 டெபாசிட் செய்தால் வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### மறுமுதலீட்டுத் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 12 மாதங்கள் | 1,185 |
| | 24 மாதங்கள் | 1,430 |
| | 36 மாதங்கள் | 1,760 |
| | 44 மாதங்கள் | 2,000 |

### ஐஸ்வர்யா டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 10 வருடங்கள் | 6,919 |
| | 15 வருடங்கள் | 18,885 |
| | 20 வருடங்கள் | 52,827 |
| | 23 வருடங்கள் | 95,760 |

★ மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் பிரதி மாதம் ரூ.25 செலுத்தி 12 மாதங்கள் கழித்து ரூ.330 பெறுங்கள்.

★ சேமிப்புக் கணக்கில் உள்ள நிலுவை தொகைக்கு நாள் தோறும் 12% P.A. வட்டி வழங்கப்படும்.

★ நகையின் பேரில் ஒரு சவரனுக்கு ரூ.2,500 வரை கடன் வழங்கப்படும்.

★ வீட்டின் பேரிலும் கடன் வழங்கப்படும்.

★ பங்குதாரர்களுக்கு மட்டும் ★ ரூ.1 செலுத்தி ஒரு பங்கு பெற்றுக் கொள்ளுங்கள்.

★ இது சீட்டு நிறுவனம் அல்ல

Ideal/93

வேலை நேரம் :

தலைமை அலுவலகம் : காலை 9 முதல் 5 வரை. ஞாயிறுகளில் 9 முதல் 12.30 வரை. செவ்வாய் விடுமுறை.

பாரீஸ் கிளை : காலை 10 முதல் 5 வரை. ஞாயிறு விடுமுறை.

✤ பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள் ✤

* ஷானாஸ் ஹுசேன்

"

● பெண்கள் யாவருமே சுய சம்பாத்தியம் உடையவராய் இருத்தல் அவசியம்.

● குளிர்பானம் சாப்பிடுவதானால் கூட மூலிகைச் சாறுகள் கொண்டு தயாரித்ததையே தேர்ந்தெடுங்கள்.

● இரசாயன அழகுச் சாதனங்களைப் பயன் படுத்துவதைத் தவிர்த்து விடுங்கள்.

"

# முகத்தின் அழகு மூலிகையால் மலரும்!

- சொல்பவர் ஷானாஸ் ஹுசேன். உலகப் புகழ் அழகு நிலைய நிபுணர்.

டிப்ஸ்களுள் இரண்டாவதும் மூன்றாவதும் சரி... முதலாவதுக்கும் அழகுக்கும் என்ன தொடர்பு...?

''தன்னம்பிக்கை, சுதந்திரம் இவை இரண்டையும் சுயசம்பாத்தியம் உறுதி செய்யும். மன மேம்பாடு முகத்துக்கு அழகு சேர்க்கும்...'' என்கிறார் ஷானாஸ்.

லண்டன் மற்றும் இதாலியில் அழகுக் கலையை முறையாகப் பயின்றவர். அமெரிக்கா முதல் அரேபியா வரை பல உலக நாடுகளின் முக்கிய நகரங்களில் ஷானாஸின் அழகு நிலையங்கள் இயங்குகின்றன. பார்பரா கார்ட்லண்ட் (பிரபல ஆங்கில எழுத்தாளர்), இளவரசி டயானா, சோனியா காந்தி (முன்பு இந்திரா காந்தியும் கூட) போன்ற பிரபலங்கள் ஷானாஸின் வாடிக்கையாளர்கள்.

இவரது எல்லா அழகு நிலையங்களிலும் மூலிகைத் தயாரிப்புகளை மட்டுமே பயன்படுத்துகிறார்கள். தமது 35

வருட அனுபவத்தில் 90க்கும் மேற்பட்ட அழகுச் சாதனங்களை (ஆண்களுக்கும் உண்டு!) தயாரித்திருக்கிறார் ஷானாஸ்.

''நாம் உண்ணும் உணவு வகைகள்தான் நமது தோற்றப் பொலிவை நிர்ணயிப்பதில் முக்கிய பங்கு வகிக்கின்றன. சரியான உணவை உட்கொள்ளாமல் வெறும் அழகுச் சாதனங்களைப் பயன்படுத்திப் பல னில்லை'' என்று கூறும் ஷானாஸ் மூலிகை மருந்துகள் தயாரித்து அதன் மூலம்... தோற்றப் பொலிவை மேம்படுத்தும் முயற்சியில் அடுத்தபடியாக ஈடுபடப் போகிறாராம்.

சென்னையில் ஷானாஸின் மூலி கைத் தயாரிப்புகளைப் பயன்படுத்தும் கன்யா அழகு நிலையம், அவரை நேருக்கு நேர் சந்தித்து அழகுக் குறிப்புகளையும் சந்தேகங்களையும் கேட்டறியும் வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தது.

ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் ஷானாஸைச் சூழ்ந்து கொண்டு கேள்வி மழை பொழிந்தார்கள், அழகுப் பிரக்ஞை படைத்த சென்னை நகரப் பெண்கள். இரு பது முதல் நாற்பது வயது வரையிலான இந்தப் பெண்கள் கூட்டத்தில் தொழில்ரீதி யான மாடல்கள், அலோபதி மருந்துகளால் பயன்பெறாமல் அலுத்துப் போனவர்கள்; ரசாயன சாதனங்கள் உபயோகித்து ஏமாற்ற மடைந்தவர்கள்; சருமக் கோளாறுகளால் பாதிக்கப்பட்டவர்கள் எனப் பல்வகை யினர். இவர்கள் ஒவ்வொருவரும் ஒரு கேள்வி மட்டுமே கேட்க; கேட்டவர்களை ஏறிட்டு ஒரு பார்வை பார்த்தே ஆலோ சனைகள் சொன்னார் ஷானாஸ்.

அழகுக் கலையில் அதிசயங்கள் செய் ததற்காக உலக நாடுகள் ஷானாஸைக் கௌரவித்து விருதுகள் வழங்கியுள்ளன.

''ரசாயன அழகு சாத னங்கள் சக்கை போடு போடும் மேற்கத்திய நாடுகளில் உங்கள் மூலி கைச் சாதனங்களை எப் படி பிரபலப்படுத்தினீர் கள்..?'' என்று ஷானாஸி டம் கேட்டோம்.

''ஒரு மருத்துவர் தமது தொழிலுக்கு விளம் பரம் செய்வது தவறில் லையா? அதைப் போல் தான் என் தொழிலை விளம்பரப்படுத்திக் கொள்வது தவறு என்று நான் நினைக்கிறேன்... ரசாயன சாதனங்களைப் பயன்படுத்தி பக்கவிளை வுகளால் பாதிக்கப்பட்ட வர்கள், என் உதவியை நாட, அவர்களுக்கு எனது மூலிகைச் சாதனங்களைச் சிபாரிசு செய்தேன். பயனடைந்தவர்கள் என்னைப் பற்றிப் பிறரிடம் சொல்ல, வாய் வார்த் தையாகவே விஷயம் பரவி விட்டது. இப் போது உலகெங்கிலும் இந்த மூலிகைச் சாத னங்களைப் பயன்படுத்துகிறார்கள்.''

''இந்த அழகுச் சாதனங்கள் மத்தியதர வகுப்பினருக்கு எட்டாத விலையில்தானே கிடைக்கின்றன...''

''மூலிகைப் பொருள்களைப் பயிரிட்டு வளர்ப்பது கடினமல்லவா? அதனால் விலை சற்று அதிகமாகத்தான் இருக்கும்... ஆனால் ரசாயன சாதனங்கள் தற்காலிகமாக நிவாரணம் அளிக்குமேயொழிய நிரந்தரத் தீர்வுக்கு வழிவகுக்காது... மேலும் பக்க விளைவுகள் பயங்கரமாக இருக்கக்கூடும். உதாரணமாக, சில வகை ஹேர்டைக்களைத் தொடர்ந்து உபயோகிப்பதால் சிறுநீரகக் கோளாறுகள் கூட ஏற்பட வாய்ப்பு உண்டு. ஆனால் மூலிகைச் சாதனங்கள் சிறிதும் அபாயமற்றவை. எத்தகைய சருமக் குறை பாடுக்கும் மூலிகைத் தயாரிப்பினால் நிரந் தரத் தீர்வு காண முடியும் என்பது நான் அனு பவத்தில் கண்டறிந்த உண்மை.''

- ஆசியாவிலேயே மூன்றாவது மிகப் பெரிய மூலிகை மையத்துக்குச் சொந்தக் காரர் ஷானாஸ் ஹுசேன். ஜெட்டாவில் (சவுதி அரேபியா) ஆறு ஏக்கர் நிலப்பரப் பில் உள்ள அம் மையத்தில் நட்சத்திர ஓட்ட லுக்கு நிகரான சேவை வழங்குகிறார். ஊனமுற்றவர்களுக்காகப் பிரத்யேகமான அழகுக் கலை வகுப்புகளும் நடத்துகிறார் ஷானாஸ் ஹுசேன்.

- கீதா மோஹன்

படங்கள் : கோபிநாத்

* கேள்விக் கணைகளுடன் பெண்கள்



**ச**மீப காலமாக அவன் குரல்களைக் கேட்க ஆரம்பித்திருந்தான். குரல்கள் ஒலித்தது மண்டைக்குள்ளிருந்தல்ல. அவனது அறையில், லாட்ஜ் பாத்ரூமில், தியேட்டரில், மெஸ்ஸில் என்று அவன் தனியாக இருக்க நேர்ந்த அத்தனை இடங்களிலும் குரல்களைக் கேட்பது சகஜமானதாக ஆகி விட்டது. கூடவே தன்னை யாரேனும் கவனிக்கிறார்களா என்ற பிரக்ஞையும் எழ, சுற்றிலும் அடிக்கடி பார்த்துக் கொண்டான். ரவி லாட்ஜை காலி செய்து விட்டுப் போன பிறகு இதெல்லாம் அதிகமாகி விட்டதைப் போல உணர்ந்தான்.




ரவியும் அவனும் ஒன்றாக ஒரே லாட்ஜில் நான்கைந்து வருடங்களுக்கு மேல் இருந்தார்கள். எங்கும் அவர்களிருவரையும் ஒன்றாகத்தான் காண முடியும். இருவரில் யாரேனும் ஒருவரைத் தனியாகக் காண நேர்ந்தால் மற்றவரைப் பற்றிக் கட்டாயமாக விசாரிக்குமளவுக்கு அவர்களின் நட்பு பிரபலம் அடைந்திருந்தது. இருவருடைய அலுவலகமும் ஒரே பகுதியில் இருந்தது. எல்லாவற்றுக்கும் வசதியாக இருந்தது. அவர்களிருவரும் காலையில் சேர்ந்துதான் வண்டியில் புறப்படுவார்கள். பெரும்பான்மையான சமயங்களில் அவன் ஆஃபீஸ் வண்டியை உபயோகப்படுத்திக் கொண்டிருந்தான். ரவியை அவனது அலுவலகத்தில் விட்டு விட்டுப் போவான். மாலை திரும்பும் போதும் அப்படித்தான்.

லாட்ஜுக்கு வந்த புதிதில் ரவியை அவனுக்குப் பிடிக்கவே இல்லை. ரவி அவனை விட ஏழெட்டு வயது சிறியவன். எனவே தான் தோழமை கொள்வதற்கு ரவி உகந்தவனில்லை என்று தோன்றியிருந்தது. அவனைத் தவிர்க்கும் பொருட்டு, அலுவலகம் முடிந்ததும் வெளியே சுற்றித் திரிந்து விட்டு அப்படியே மெஸ்ஸிலும் சாப்பிட்டு விட்டு வரத் துவங்கினான். ரவி அப்போதும் கூட அவனுக்காகக் காத்திருந்து விட்டு அதன் பிறகு தனியாகச் சாப்பிடப் போனான். அவனுக்கு ஏனோ குற்றவுணர்வு எழுந்தது.

அதன் பிறகுதான் மெள்ள மெள்ள அவனது தனிமையான சுபாவம் உடைந்தது. ரவி பேசுவதை சற்றே கேட்கத் துவங்கினான். ரவியின் கூர்மையான நகைச்சுவை தொனிக்கும் பேச்சைக் கேட்கும் போது சிரிக்காமல் இருக்க முடிந்ததில்லை. மதிய இடைவேளைகளிலும் கூட ரவியின் அலுவலகத்துக்குப் போய்ப் பேசிக் கொண்டிருப்பதை அவன் வழக்கமாகக் கொள்ளத் துவங்கினான்.

**ர**வியின் அலுவலகத்தில் பெண்கள் நிறைந்திருந்தார்கள். இவன் போகும் போதெல்லாம் யாராவது ஒருத்தி ரவியின் சீட்டுக்கு எதிரில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். ரவி அவர்களில் ஓரிருவரை அறிமுகப்படுத்தி வைத்தான். ''ஹலோ!'' என்றதோடு அவனால் வேறெதுவும் பேச முடியவில்லை. என்ன பேசுவதென்றும் தெரியவில்லை. அந்தப் பெண்கள் சிறிது நேரம் காத்திருந்தது போல நின்று விட்டுப் போனார்கள். ரவியைத் தவிர வேறு யாரிடத்திலும் தன்னால் சரளமாகப் பேச முடியாது என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அன்று இரவு அந்தப் பெண்கள் எல்லோரும் மனத்தளவில் அவனைச் சூழ்ந்திருந்தார்கள். ரவியை விட கூர்மையான நகைச்சுவையோடு அவன் அந்தப் பெண்களிடம்



சரளமாகப் பேசி வான். கல்யாணமாவ சிலர் அவனை வீட்டுக்குக் கூட அழைத்தார்கள். அவன் அவர்களின் மனம் காயப்படாமல் மென்மையாக மறுத்தான். அந்தப் பெண்களுள் சிலர் அவனைக் காதலிக்கவும் செய்தார்கள். அவன் மிக இயல்பாக, தனக்கு அப்படிப்பட்ட எண்ணம் எதுவுமில்லையென்று உணர்த்துவது போல மிகுந்த கண்ணியத்தோடு நடந்து கொண்டான்.

அவன் குரல்களைக் கேட்கத் துவங்கியதற்கு இது ஒரு காரணமாக இருக்கக்கூடும். ரவி பக்கத்திலிருக்கும் வரை இதற்கு அதிக வாய்ப்பில்லாமல் இருந்தது. ரவியும் அவனும் களைத்துப் போகும் வரை தினமும் பேசித் தீர்த்தார்கள். அந்த அளவுக்குப் பேசுவதற்கு விஷயமிருந்ததா என்று இப்போது நினைத்தால் பிரமிப்பாக இருக்கிறது. ஆனால் இதற்கெல்லாம் நேரெதிராக அமைந்தது போல ரவி திருமணம் செய்து கொண்டு லாட்ஜை விட்டுப் போன பிறகு யாருமற்ற தனிமை அவனைச் சூழ்ந்து விட்டது.

ரவிக்குத் திருமணமாகி இரண்டு மாதத்திற்குப் பிறகு மதிய இடைவேளையில் அவனைப் பார்ப்பதற்காகப் போனான். ரவி அப்போது சீட்டில் இல்லை. பார்வையைச் செலுத்தி லேசாகத் தேடிப் பார்த்தான். அந்தப் பெண்கள் இவனைப் பார்த்து இலேசாகப் புன்னகை செய்தார்கள். ஆனால் அவன் எதுவும் அவர்களிடம் கேட்காமல் வந்த வழியே திரும்பினான். ரவி அப்போது தான் வெளியே இருந்து வந்தவன், அவனைப் பார்த்ததும் மகிழ்ந்து போய் தன் சீட்டுக்கு அழைத்துப் போனான்.

ரவியின் தோற்றமும் பேச்சும் மாறியிருந்ததை அவன் கவனித்தான். பேச்சில் ஒரு பெரிய மனிதத்தனம் இருந்தது. அந்தப் பெண்களிடம் ரவி அலுவலக சம்பந்தமாக மட்டும் - அதுவும் ஓரிரு வார்த்தைகளில் - பேசினான். அவ்வப்போது தன் மனைவி

**அஷோக் ராஜா**

# அருள்வாக்கு



வஸந்தவத் லோகஹிதம் சரந்த : என்று ஆசார்யாள் விவேக சூடாமணியில் சொல்கிறார். வஸந்த காலம் போல உலக நலனைப் பண்ணியபடி உலாவுகிறார்களாம் மகான்கள். வஸந்தம் என்று ஒன்று கண்ணுக்குத் தெரிகிறதோ? சந்திரனாவது தெரிகிறது. மஹான்கள் தங்களை இப்படிக் காட்டிக் கொள்வது கூட இல்லை. ஆனாலும் வஸந்தம் வந்தால் தன்னால் தென்றல் ஹிதமாக வீசுகிறது. புஷ்ப ஜாதிகள், மல்லிகை முக்யமாக எங்கே பார்த்தாலும் மலர்ந்து 'கம்' மென்று வாசனை வீசுகின்றன. மா முதலான பழங்கள் குலுங்க ஆரம்பிக்கின்றன. சிசிருது என்கிற பின்பனிக்காலத்தில் இலையை உதிர்த்து விட்டு நின்ற மரமெல்லாம் வஸந்தம் வந்ததும், அதற்குப் பச்சைக் கொடி காட்டுகிறதுபோல பச்சைப் பசேல் என்று தளிர் விடுகின்றன. இப்படித்தான் இந்த சரீரத்திலிருக்கும் போதே 'தான் பிரம்மம்' என்று தெரிந்து கொண்டு விட்ட ஜீவன் முக்தனும் கூட unconscious ஆக (தன்னுடைய புத்தி பூர்வமாக இல்லாமலே), unnoticed ஆக (தன்னைக் காட்டிக் கொள்ளாமலே) லோக ஹிதத்தை உண்டாக்குகிறான் என்று, இப்படி இருந்து காட்டிய ஆசார்யாளே un self- conscious ஆக (தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்கிறோம் என்ற நினைப்பேயில்லாமல்) சொல்லியிருக்கிறார்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

யின் குணாதிசயங்களைப் பற்றிச் சில சமயம் பெருமையாகவும், சில சமயம் சலிப்போடும் சொன்னான். அவன் அங்கே வந்த போது ரவியை நீண்ட நாட்கள் கழித்துச் சந்திக்கிற ஆவலில் மனம் நிறைய புன்னகையோடு வந்தான். ஆனால், அதெல்லாம் அப்படியே உறைந்து போய் விட்டதைப் போல தோன்றிற்று. ரவியிடம் விடை பெறும் போது சம்பிரதாயமாகவும், வலுக்கட்டாயமாகவும் புன்னகை புரிந்தான்.

ரவி என்றுமில்லாமல் அவன் கைகளைப் பற்றிக் குலுக்கி, ''ஆல் தி பெஸ்ட்'' என்றான். இனிமேல் ரவியை அடிக்கடி பார்க்கப் போவது நன்றாக இருக்காது என்று தோன்றியது.

அன்று மாலை லாட்ஜுக்குப் போகப் பிடிக்காமல் வெளியே அலைந்தான். கூட்டமில்லாத ஒரு ஹிந்திப் படத்துக்குப் போய், தனியாக ஒரு மூலையில் அமர்ந்து கொண்டான். படம் சில நிமிடங்களுக்குச் சலிப்பாக நகர்ந்தது. திரையில் தோன்றிய பெண் மிகவும் அழகாக இருந்தாள். அவன் காலியாயிருந்த பக்கத்து சீட்டில் மெள்ள சாய்ந்து கொண்டான். அப்போதுதான் அவனுக்கு நெருக்கமாக அந்தக் குரல் ஒலித்தது.

'- என்னங்க இது! யாராச்சும் பார்க்கப் போறாங்க!' என்றது.

அவன் லேசாகத் தலையைத் திருப்பிப் பார்த்து விட்டு,

''தூக்கம் தூக்கமாக வருதுப்பா. இன்னிக்கு சினிமாவுக்கு வேண்டாம்னு சொன்னேன். கேட்க மாட்டேன்னுட்டே. படம் வேற ரொம்ப போர்'' என்றான்.

இடைவேளை முடிந்து படம் துவங்கியதும் எழுந்து வெளியே வந்தான். வண்டியில் பறந்த போது பின்னாலிருந்து மீண்டும் அந்தக் குரல் ஒலித்தது.

'- என் மேல கோபமாங்க?'

அவன் எதுவும் சொல்லாமல் வண்டியை முறுக்கினான். அது சீறிப் பாய்ந்தது. சிக்னலை நெருங்கும் போதும் அவன் வேகத்தைக் குறைக்காதது கண்டு அந்தக் குரல் பதறிற்று.

'- மெதுவாப் போங்க. ப்ளீஸ்... எனக்குப் பயமா இருக்கு.'

அவன் வண்டியின் வேகத்தைச் சட்டென்று குறைத்து சிக்னலில் வண்டியை நிறுத்தினான்.

'- படம் இவ்ளோ போரடிக்கும்னு எனக்குத் தெரியாது. ஐ'ம் ஸாரிங்க.'

''அதுக்காகச் சொல்லலைப்பா. பணம் நேரம் எல்லாம் வேஸ்ட் ஆகுதுன்னுதான் சொன்னேன். ஆல் ரைட் விடு!''

பக்கத்து வண்டியிலிருந்தவன் அவனைப் பார்த்துத் திரும்பி,

''என்ன... என்னவோ சொன்னீங்க?'' என்றான்.

அவன் திடுக்கிட்டுப் போய் ஒரு மாதிரி புன்னகைத்தான்.

''இல்லையே! நத்திங்.''

வாட்ச்மேனை டிபன் வாங்கி வரப் பணித்து விட்டு ரூமுக்கு வந்து உட்கார்ந்தான். டீ பையன் உள்ளே வந்து டீயை வைத்து விட்டு ''இதோட பதி னாறு டீ ஆச்சு சார்'' என்றான். அவன் மௌனமாக டீயை உறிஞ்சினான். பக்கத்தில் ரவி யின் கட்டில் காலியாக இருந் தது. அவனுடைய இடத்துக்கு இன்னும் யாரும் வரவில்லை. மௌனமாகக் கட்டிலையே பார்த்துக் கொண்டிருந்தான். லேசாகத் தலை வலித்தது.



''கட்-அவுட்'' பற்றி நான் அனுப்பின ஜோக் ஒண்ணு கூடப் போட மாட்டேன்றீங்களே?''

''நீங்க அதையெல்லாம் வேற பத்திரிகையிலிருந்து 'கட்-அவுட்' பண்ணியிருக்கீங்களே!''

- சே. வி.

'- எப்படிங்க இருக்கு தலைவலி?'

''கொஞ்சங்கூட குறையலப்பா.''

அவனாக எழுந்த டிராயரிலிருந்து விக்சைத் தேடி எடுத்துத் தடவிக் கொண் டான்.

'- நான் தடவி விடட்டுமா? லேசாப் பிடிச்சு விட்டா சரியாயிடும்.'

''வேணாம்ப்பா. பரவால்ல.''

வழக்கமாகத் தூங்கும் நேரத்தை விட சீக்கிரமே விளக்கணைத்துப் படுத்துக் கொண்டான். தலையணையைப் பக்கவாட் டில் வைத்து அணைத்துக் கொண்டு குப்புறக் கிடந்தான். சுவரில் ரவி மாட்டி விட்டுப் போன நடிகை படம் போட்ட காலண்டர், காற்றில் ஆடிக் கொண்டிருந்தது. பரந்த மணற்பரப்பில், புழுதிக் காற்று வீசும் பாலையில் தான் மட்டும் தனியே கிடப்ப தாக எண்ணிக் கொண்டான். அவனுடைய வயிறு லேசாகக் குலுங்கியது. கண்கள் கசிந் தன. மெள்ள மெள்ள அந்த மணல்வெளி ஒரு பெண்ணின் மடி போல மாறிற்று. அவ னது கேசத்தை வாஞ்சையோடு கோதியது.

'- ரவி மாறிட்டான்னா வருத்தப்பட றீங்க? நான் இருப்பேங்க உங்க ளுக்கு. எப்பவும் மாறாம. பீ சுவீ.'

அவன் தலையணையை இன்னும் இறுக்கமாக அணைத் துக் கொண்டான்.

**உ**ள்ளூர் விடுமுறையாத லால் மறுதினம் அவன் அலு வலகத்திற்குப் போகவில்லை. பேப்பரோடு போன மாத பில் லும் சேர்ந்து வந்திருந்தது. ரவி இருந்தவரை இதையெல்லாம் பகிர்ந்து கொண்டிருந்தார்கள். பில்லைப் பார்த்ததும் பேப் பரை நிறுத்தி விடலாமென யோசித்தான். மத்தியானம் தபால் வந்தது. ஊரிலிருந்து பெரிய தங்கை ஓரங்களில் மஞ்சள் தடவி கார்டு எழுதியிருந்தாள். சின்ன தங்கை பெரி யவளாகி விட்டதாகவும் அவ்வார ஞாயிறில் ஊருக்கு வருமாறும் எழுதியிருந்தாள். பின் குறிப்பாகத் திருச்சி வரனிடமிருந்து பதில் வரவில்லை என்று ஒரு வரி இருந்தது. அவன் ஆயாசமாகப் படுக்கையில் விழுந் தான். எப்படியும் நான்கைந்தாயிரம் செல வாகும். அம்மா அவனைத் தான் எதிர் பார்த்துக் காத்திருப்பாள். தரையை வெறித்த படி நீண்ட நேரம் அசைவின்றிக் கிடந்தான். மீண்டும் அந்தக் குரல் அவனை அழைத்தது.

'- நாளைக்குப் பணம் தரேன். விசேஷ மெல்லாம் நல்லா செய்துடலாம். போய் டிக் கெட் ரிசர்வ் பண்ணிடுங்க.'

''உனக்கேதுப்பா அவ்ளோ பணம்?''

'- உங்க சம்பளத்துல மிச்சம் பிடிச்சுக் கொஞ்சம் பாங்க்ல போட்டிருக்கேங்க. அது போதும்னு நினைக்கிறேன்.'

அவன் பரவசம் கொண்டவனாய்க் குரல் வந்த திசையில் அணைத்தவாறு முத்த மிட்டான். லேசாகத் திறந்திருந்த அறைக் கதவை மேலும் திறந்து டீ பையன் உள்ளே வந்து டீயை மேஜை மேல் வைத்து விட்டு, ''இதோட பதினாறு சார்'' என்றான்.

''நீங்க முப்பது ரூபாய்க்கு டிபன் சாப்பிட்டதுக்கு சர்வர் ஏன் மயக்கம் போட்டு விழுறார்?''

''ஹி... ஹி... 'இன்னிக்கு என்னவோ சரியாப் பசி யெடுக்கலே'ன்னு சொன்னேன்!''

- எஸ். ரமேஷ்



முதலில் கொஞ்சம் புராணம் : ஹிரண்யன், பிரகலாதனைக் கொல்ல முயன்ற பல்வேறு உபாயங்களுள் நெருப்பில் இடுவதும் ஒன்று. 'ஹோலிகா' என்ற அரக்கியின் மடியில் பிரகலாதனை உட்கார வைத்து ஜோவென்று எரிய விட்டார்களாம். ஹோலிகாவை நெருப்பு ஒன்றும் பண்ணாதாம். ஏதோ வரம் சமாசாரம்! அதனால் ஹிரண்யன் மேற்படி உத்தியைக் கையாண்டான். ஆனால் கிளைமேக்ஸில் பிரகலாதன் பிழைத்து விட, ஹோலிகா ஹோகயா! அதன் விளைவாக ஹோலி - இது மகாராஷ்டிரா தவிர மற்ற வட மாநிலங்களில் சொல்லப்படும் கதை.

மகாராஷ்டிராவில் இது : மன்மதனை, சிவபிரான் எரித்த நாளை இங்கு ஹோலியாகக் கொண்டாடுகிறார்கள்.

இனி பொது :

இலையுதிர் காலம் முடிந்து, வசந்த கால ஆரம்பத்தில் இப்பண்டிகை வருகிறது. நமது 'போகி'தான் அங்கு ஹோலி. இங்கு செய்வதைப் போன்றே சொக்கப்பனை கட்டி, பழைய பொருட்களை எரித்தல் போன்ற டிட்டோ சடங்குகள். ஹோலி தினத்திலிருந்து பதினைந்தாவது நாள் 'குடி பாட்வா' (Gudi Padwa) என்ற ஹைலைட் நிகழ்ச்சி. அன்று ஹோலி கொண்டாட்டங்களின் நிறைவு.

மகாராஷ்டிர ஹோலியில், ஆண்கள் பெண்வேடம் போட்டு ஆடிப் பாடுவது சிறப்பு. மன்மதனை, சிவன் எரித்து விட்டதனால், ரதி அவரிடம் பாட்டு பாடி தன் புருஷனைத் திரும்பத் தரும்படிக் கேட்டாளாம். அதன் விளைவாக இந்தப் பெண் வேட நிகழ்ச்சி.

அடுத்தது பிரசித்தி பெற்ற கலர்ப் பொடி விஷயம். இலையுதிர் கால மொட்டை மரங்கள் வசந்த கால ஆரம்பத்தில் கலர்க்கலராய்ப் பூத்துக் குலுங்க ஆரம்பிக்கிறதில்லையா? அதனை, அதன் முறையிலேயே வரவேற்பதன் பொருட்டுத்தான் இந்த Colour Spray. 'இப்போது வண்ணமயமாய்ப் பூத்துக் குலுங்க ஆரம்பிக்கும் மலர்களைப் போல் உன் வாழ்வும் இருக்கக் கடவது' என்று சந்தோஷித்து, அடுத்தவன் (புது) ஆடையில் மாடர்ன் ஆர்ட் வரைவது இதன் தாத்பர்யம்.

கல்கத்தாவில் வருஷா வருஷம் இந்தக்

# வசந்தத்துக்கு வரவேற்பு!







கலர்ப் பொடி தூவும் விளையாட்டு, பெரும்பாலும் வினையாக முடிகிறது. உஜாலாவுக்கு மாறிவிட்ட முஸ்லிம்களின் மீது இவர்கள் கலராபிஷேகம் செய்ய, அதன் ஹைலைட்டாகச் சிவப்புப் படலம் உருவாவது வருஷம்தோறும் ஹோலி தின நாளிதழ் செய்தி.

பம்பாயில் விலக்கு. ஹிந்து, முஸ்லிம் அதிகம் வாழும், தாராவி, குர்லா பகுதிகளில் இரு சாராருமே பரஸ்பரம் இந்த விளையாட்டில் ஈடுபட்டு வருவது வியப்பான உண்மை. (இந்த வருஷம் எப்படியோ.)

ஹோலி தினத்தின் பிறிதொரு முக்கிய அம்சம் 'பங்க்' என்னும் பானம். பால், வெல்லம், கொஞ்சம் போல் கஞ்சா கலந்து உருவாக்கப்படும் இப்பானத்தை நைவேத்யம் செய்து, அன்றைய தினம் (வட இந்திய) ஆண், பெண் இருபாலரும் தாராளமாக அருந்தி, ஆடிப் பாடுகிறார்கள்.

கூடைசியாகச் சரித்திரம். முகலாயச் சக்கரவர்த்தி அக்பர், ஹோலி கொண்டாட்டங்களில் கலந்து கொண்டதற்கான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கின்றன. ஒரு முஸ்லிம் மன்னர், ஹிந்து பண்டிகை கொண்டாடினது ஒரு செய்தி இல்லையா?

அக்பரின் பிரதான 'பேகம்' ஒரு ஹிந்து. அவரது அந்தப்புரத்தில் ஒரு கோவிலே இருந்ததாம்! அவர் ஒரு ஹிந்து பண்டிகை விட்டு வைப்பதில்லை. அக்பரும் மதச்சார்பற்றவர். ஸோ, நோ பிராப்ளம்!

– பா. ராகவன்

வண்ணப்படம் : கோபிநாத்

---

## சார்மினார் சானல்

# பிரதமர் வீட்டில் திருட்டு!

**பி**ரதமர் குடியிராத வங்கார கிராமத்து வீட்டுக்கு ஏராளமான காவற்படை; மாசம் 30 லட்சம் செலவு என முன்பு எழுதியிருந்தோம். ஆனால் சென்ற மாதம் அவர் வீட்டுக் கொட்டிலிலிருந்து இரண்டு காளை மாடுகள் திருட்டுப் போய்விட்டன!

யாரோ வீரப்பனுக்கு மேலான பலே இல்லாடி!

### 'மலை'ப்பான சாதனை!

ஆந்திர ஆவக்காய் போல பிரசித்தி பெற்றவர் திருப்பதி பாலாஜி. ஆந்திராவில் எந்த அமைச்சரவை பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டாலும் சரி; அடுத்த நாள் திருப்பதிக்கு ஏர்-டாஷ்; பிரார்த்தனை; உண்டி. வேங்கடவன் தரிசனத்தில் நமது ஜனாதிபதியை ஒருவரும் மிஞ்ச முடியாது. அடுத்து வருவது அவரது, 35 வது திருப்பதி விஜயம்.

### யாத்திரிக்குப் பிழைப்பு – சிலைகாண அழைப்பு

யாத்திரி வெயில் காலத்தில் ஐஸ்கிரீம் விற்றான். மற்ற காலங்களில் ஏதாவது கூலி வேலை. தற்போது உடலை அதிகம் வருத்திக் கொள்ளாத வேலை ஒன்று கண்டு பிடித்திருக்கிறான்.

ஹைதராபாத் ஹுசேன் சாகர் ஏரிக்குள் மூழ்கிய மாபெரும் புத்தர் சிலையை மீட்டு, ஜிப்ரால்டர் பாறை மேல் நிறுத்தி வைத்திருக்கிறார்கள். பாதுகாப்பு காரணமாக திறப்பு விழா வரை யாரும் அண்மையில் சென்று காண முடியாது. ஜனங்கள் ஆர்வத்தை உணர்ந்த யாத்திரி ரூ. 1500 க்கு ஸ்டாண்டுடன் கூடிய ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியை வாங்கி, ஏரிக்கரை நடைபாதையில் வைத்தான். தலைக்கு ரூ. ஒன்று. புத்தர் சிலை கண்ணருகே! பிஸினஸ் அலை பாய்கிறது! அயல்நாட்டு டூரிஸ்டுகளும் நோக்குகிறார்கள். தினசரி ரூ. 40, 50 வருமானம். விடுமுறை நாட்களில் இன்னும் அதிகம். என்னே புத்தரின் கருணை. இரவு 7 முதல் 9 வரை புத்தர் விளக்கு வெளிச்சத்தில் பிரகாசிக்கிறார். அதனால் இரவிலும் பிஸினஸ்.

யாத்திரி வருகிற கோடையில் ஐஸ்கிரீம் விற்பானா? ஓ யெஸ். ஐஸ்கிரீம் வண்டி அருகே டெலஸ்கோப்பை வைத்துக் கொண்டு - கண்ணுக்கும் விருந்து படைப்பான்.

ஆனால் யாத்திரி போல பல 'புத்திசாலிகள்' ஏரிக்கரையில் இப்போது அவதாரம் எடுக்க ஆரம்பித்துள்ளார்கள்!

இந்த புத்தர் சிலையைப் படைத்தவர் கணபதி ஸ்தபதியும், அவரது சீடர்களும் தாம் என எண்ணும்போது தமிழகத்தின் கலைப் பெருமை, புத்தர் சிலையை விட உயருகிறது!

– சுபஸ்ரீ



● வீட்டில் திருட்டு



● முப்பத்தைந்தாவது விஜயம்

## குடும்பத்துடன் பார்க்க வேண்டிய தரமான படம்

"தொட்டு தாலிகட்ன பொண்டாட்டியோட கண்லருந்து
ஒரு சொட்டு கண்ணீர் வந்தாகூட அவளை கட்டிக்கிட்டவன்
ஆம்பளையில்லேன்னு நினைக்கிறவன் நான்."

(ரஜினிகாந்த்) — வானவராயன்

இசைஞானி
**இளையராஜா**வின்
இசையில்

சூப்பர்ஸ்டார்
**ரஜினிகாந்த்**
நடிக்கும்










சுஜாதா உதயகுமார்
கோகுல்கிருஷ்ணா
A. கார்த்திக்ராஜா D.F.Tech
B.S. நாகராஜ்

**AVM PRODUCTIONS**

**M.சரவணன் M.பாலசுப்ரமணியன் M.S.குகன்**

எஜமான் — தபால் பெட்டி எண்: 2264 சென்னை-26.



# மாயக்குதிரை

## 3

**கிருஷ்ணா டாவின்ஸி**

ஒரு வாரத்தில் பிளாக்கி சூர்யாவுடன் நன்றாகப் பழகி விட்டது. அதன் கண்களுக்கு அவன் உருவம் பழகியது. சில சமயம் மெல்லிசாகக் கனைக்கக் கூடச் செய்தது. சூர்யாவின் எடை முதல் ஒரு வாரத்தில் புள்ளி ஐந்து கே. ஜி. குறைந்தது. நாட்கள் மிக வேகமாக நகர்ந்தன.

அன்று அதிகாலை சூர்யா மைதானத்திற்கு வந்தான். பிளாக்கி கம்பீரமாகக் காத்திருந்தது. இருட்டில் அதன் கண்களைச் சூர்யா சரியாகக் கவனிக்கவில்லை. அதன் பெரிய ஓவல் வடிவக் கண்களில் மிக நுண்ணிய வித்தியாசம் இருந்ததைக் கவனிப்பது கடினம். அதில் மிதந்த ரகசியமான பாவத்திற்குப் பெயர் என்ன? வெறி? கொடூரம்? பரிதாபம்? அந்தக் கறுப்புக் குதிரையின் வெல்வெட் உடலுக்குள் மிக வேகமாக ஏற்படும் மாற்றம் யாருக்குத் தெரியும்? உள்ளே அதன் சிக்கலான நரம்பு வலைகளுக்குள் ஒரு பிரளயம் நடைபெறுவதை பிளாக்கியால் உணர முடியவில்லை. ஆனால் அதற்கு உடல் மாறியிருப்பது போன்ற உணர்வு தோன்றியிருக்க வேண்டும். காலின் மேற்புறச் சதைப் பகுதி சிலிர்த்து சிலிர்த்து அடங்கியது. பயந்து, பிடரியைச் சிலிர்த்தது. வாயைத் திறந்து திறந்து மூடியது. மூச்சு வெப்பமாக இருந்தது. கால்களால் மண்ணைப் பிறாண்டியது. அதன் வலியை எப்படிச் சொல்லும் அது?

சூர்யா அருகில் வந்து, ''பிளாக்கி! வாட்ஸ் ராங்?'' என்றான்.

துரை முண்டாசைக் கட்டிக் கொண்டு, ''தலைவரே! பிஷிபிஷின்றுது. அஜீர்ணம்'' என்றான்.

''அஜீர்ணமா?''

''ஆமாம் தலைவரே. சரியாப் பூடும்.''

''ஆர் யு ஆல்ரைட்?'' என்றவன் அதன் அருகே சென்று பிடரியை ஆதரவாகத் தடவினான். அது பிடிவாதமாக முகத்தைத் திருப்பி உடல் முழுவதையும் சிலிர்த்தது. தலையை உதறியது.

''ஏய், பிளாக்கி!'' என்று விலகினான்.

முகத்தை ஆட்டிய போது அதன் வாயிலிருந்து நுரையாக எச்சில் வடிந்தது.

''ஏறுங்க, தலைவரே!''

சூர்யா ஏறிக் கொண்டு எப்போதும் போல் லகானை இழுக்க, அது புது வழக்கம் போல் முன்னங்கால்களைத் தூக்கி நிறுத்தியது. வலது, இடது என்று தரையைப் புஸ் புஸ்ஸென்று தேடி ஓடியது. சூர்யா தடுமாறினான்.

''ஏய், பிளாக்கி! என்ன ஆச்சு உனக்கு?''

துரை ஓடி வந்து அதன் முகத்தைப் பிடிக்க, எதிர்பாராமல் அவனை அது எட்டித் தள்ளியது. சூர்யாவுக்குக் கோபம் தலைக்கேறியது. லகானை மூர்க்கமாக இழுத்தான்.

பிளாக்கிக்கு வலித்திருக்க வேண்டும்.

தடுமாறி நின்றது. கனைத்தது.

''பிளாக்கி, ரன்!'' என்றான் சப்தமாக.

கீழ்வயிற்றைக் கால்களால் எத்தினான்.

ஓடியது.

ஒழுங்கில்லாமல் ஓடியது. சீராக இல்லாமல் அதன் உடல் ஆடியது.

''துரை! என்னாச்சு இதுக்கு?''

''ஜிஞ்சர் கொடுக்கணும்ங்க!''

''போய்யா!''

துரை ஒதுங்கி நின்று சூர்யா அந்தக் குதிரையைத் திறமையாக அடக்குவதைப் பார்த்தான். பிளாக்கி மறுபடி ஓடத் துவங்கியது. மைதானத்தைச் சுற்றி வந்தது.

நேரம் கடந்தது. சூர்யா இறங்கினான்.

''துரை! பிளாக்கி நான் சொன்னா கேக்கும்!''

''சாதுங்க அது! திடீர்னு வெறுக்கு வந்திருக்க போல.''

''உடம்பு சரியில்லையா?''

''நேத்து ஒரு பொம்பளை குதிரையைப் பாத்திருக்க தலைவரே. அதுலேர்ந்து தலைகால் புரியலை!''

''பாவம் துரை, அது...''

''ஆமாங்க.''

சூர்யா சிரித்தபடி பிளாக்கியின் முகத்தை வலது கையால் அணைத்தான். மூக்கின் மேல் முத்தமிட்டான். அது விலக நினைத்து, ஆனால் பழகியவன் என்பதால் விட மனமின்றித் தன் வாயினை அவன் கைகளில் ஈஷ...

சூர்யாவின் வலதுகையிலிருந்த காயத்தின் திறந்திருந்த, கண்ணுக்குத் தெரியாத சின்னச் சின்ன தோல் ஓட்டைகளின் மேல், பிளாக்கியின் எச்சில் படிந்தது. உள்ளே நுழைந்தது.

''ஏய், எச்சில்!'' என்றவன் அவசரமாகத் துடைத்தான்.

''முத்தம் குடுக்குது தலைவரே!''

''துரை! நீவி ஒழுங்காப் போடுறியா?''

''பின்ன?''

''பிளாக்கி, ஸீ யு!''

சூர்யா வீட்டினுள் நுழைந்தான். சோஃபாவில் அமர்ந்து கொண்டான். பிபிஸி உலகச் செய்தியைப் பார்த்தபடி காப்பி குடித்தான். மகன் இன்னும் எழுந்திருக்கவில்லை. திலகா அவன் அருகில் வந்து அமர்ந்து கொண்டாள்.

''சூர்யா! உங்களைக் கிட்டே பார்த்தே ரொம்ப நாள் ஆன மாதிரி இருக்கு...'' என்றாள். தோளில் சாய்ந்து கொண்டாள். அவன் கழுத்து வியர்வையை முத்தமிட்டாள். கைகளைப் பிணைத்துக் கொண்டவள், வலது கையின் காயத்தைப் பார்த்து, ''இன்னும் ஆறலையா இது?'' என்றாள் திடுக்கிட்டு.

''சே! சே! இது வெறும் தழும்பு!''

''என்ன சூர்யா? இவ்வளவு கேர்லஸா?''

''கமான் ஜிங்லி. இந்த மாதிரி அல்ப காயத்துக்குப் பயப்படலாமா?''

''எல்லாமே உங்களுக்கு விளையாட்டு!''

''லைஃப் இஸ் எ கேம்'' என்றவன் அவளை இழுத்து அவள் பொய்யாக மறுக்க மறுக்க அப்படியே தூக்கிக் கொண்டான். முத்தமிட்டபடி நடந்தான்.

''விடுங்க... ம்...''

''ஜிங்லி, யு ஆர் மைன்'' என்றான்.

படுக்கையறைக் கதவு மூடியது.

திலகா எழுந்தாள். தலைமுடியைச் சரி செய்து கொண்டாள். உடைகளைச் சரி செய்து, ''சூர்யா! போய் குளிங்க'' என்றாள்.

''நோ! தூங்கப் போறேன். இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை...'' மல்லாந்து படுத்தான்.

''ப்ளீஸ், உங்க உடம்பெல்லாம் வியர்வை. குளிச்சுட்டுத் தூங்குங்க...''

''நோ! ஐ'ம் கோயிங் டு ஸ்லீப்!'' என்றான். தலையணையை அணைத்தபடி சொருகும் கண்களை மூடினான். அவன் நினைத்தால் நினைத்ததுதான்.

திலகா தோள்களைக் குலுக்கினாள். வெளியே சென்றாள்.

சூர்யா குளித்திருக்கலாம்.

சோப்பினால் உடல் முழுவதும் கழுவும் காரியத்தில் அந்தக் காயத்தையும் கழுவியிருக்கலாம்.

சோப் தண்ணீர் சாதாரணமில்லை. அது, மருந்து.

கிரிஸ்டல் பர்மாங்கனேட், ஹைட்ரோக்ளோரிக், நைட்ரிக் ஆஸிட், லூனார் காஸ்டிக் - இவையெல்லாவற்றிற்கும் இணையானது, ஏன், மேலானது - சோப்புத் தண்ணீர்.

சூர்யா - உன் அலட்சியத்தின் விலை தெரியுமா உனக்கு?

சூர்யா நீண்ட நேரம் தூங்கிக் கொண்டிருந்தான்.

அன்றிரவு சூர்யாவிடம் பணிவாக வந்து நின்றான் துரை. அவன் கண்கள் கலங்கியிருந்தன. கை கூப்பியபடி, ''தலைவரே! குதிரைக்கு உடம்பு சரியில்லை தலைவரே!''

என்றான்.

''என்ன ஆச்சு?''

''வாயிலிருந்து நுரை நுரையா வருது தலைவரே. சோர்வா விழுந்திடுச்சு. மூச்சு விடத் தவிக்குது. புஸ்ஸு புஸ்ஸுங்குது. உடம்பு தூக்கித் தூக்கிப் போடுது...''

''அடப்பாவி! டாக்டர்கிட்டே போனியா?''

''போனேங்க! ஊசி போட்டிருக்காரு.''

''சரி, போ! சரியாயிடும்.''

''பயமா இருக்குது தலைவரே!''

''ஒண்ணும் ஆகாது போடா! இரு. ரூபா வேணுமா?''

''வேண்டாங்க!''

''இரு. சுந்தரம்! இவனுக்கு ஒரு ஆயிரம் ரூபாய் கொடு.''

துரை வாங்கிக் கொண்டு சலாம் செய்து விட்டு அகன்றான்.

**ம**றுநாள் அதிகாலை சூர்யா எழுந்திருக்கும் முன்னால் நிலகா எழுந்திருந்தாள். அவனைத் தோளில் கை வைத்து, ''சூர்யா! தூங்குங்க. இன்னிக்கு ஹார்ஸ் ரைடிங் கிடையாது'' என்றாள்.

''ஏன் ஜிங்கி?''

''பிளாக்கி செத்துப் போச்சு'' என்றாள் நிலகா. ''துரை வந்து சொல்லிட்டுப் போனான்.''

**ம**றுநாள் வேறு ஆரோக்யமான ப்ரவுன் குதிரை வந்து விட்டது. பிரவுனி. சூர்யாவை, பிளாக்கியின் இழப்பு மிகவும் பாதித்திருந்தது. பிரவுனியைத் தட்டி, ''பிரவுனி, ஸ்டே ஹெல்தி'' என்றான்.

பயிற்சி ஆரம்பமாகியது.

சரியாக முப்பத்தி ஆறு நாள் முடிந்தது.

**ட**ப்பிங் தியேட்டரில், எதிரே திரையில் மௌனப் படம் ஓட, ரெகார்டிங் மைக் எதிரில் ஹெட்ஃபோனுடன் சூர்யா வாயசைத்துக் கொண்டிருந்தான்.

''மார்த்தாண்டம்! நான் யாரு தெரியுமா? ராஜா!'' என்றான். சட்டென்று இடது தலையோரம் என்னவோ குத்தியது. ஊசி போல், நிரடுவது போல், வலியால் கரண்டுவது போல், சரியாகப் பேச முடியாமல் தடுமாறினான்.

''சூர்யா, என்ன ஆச்சு?''

''தலைவலி ஸார்!''

''ஓ.கே. அப்புறம் பாத்துக்கலாம்.''

''தாங்க் யூ!''

வெளியே வந்த போது தலைமுழுக்க 'ஙங்ஙங்'கென்று வலித்தது. லேசாக ஜுரம் போல் உணர்ந்தான். காரில் அமர்ந்து கொண்டதும், டிரைவர் கிளப்பி, காஸெட் இசையைத் தட்டி விட்டான். ''காக்கும் கருணைக் கடலே! களிக்கும் கலாப மயிலே!''

''பாபு! பாட்டை நிறுத்து! தலைவலி!''

தொண்டை ஜிவுஜிவுவென்று தீ மாதிரி எரிந்தது. உடல் முழுக்க வருத்த, நெளிந்தான். வாந்தி எடுக்கும் உணர்வு தொண்டையைத் தூண்டியது. கை லேசாக வலிக்கிறதா? ம்ஹூம். அங்கேயா வலி? இல்லையே! உடம்பு முழுசுமா? டிரைவர் திரும்பி,

''ஸார்! டாக்டரைப் பார்க்கலாமா?''

''வேண்டாம். வீட்டுக்குப் போ! முதல்ல தூங்கணும்.''

வீட்டில் நுழைந்து களைப்பாகப் படுக்கையில் படுத்துக் கொண்டான். உடல் முழுவதும் சோர்வு. ஆனால் தூக்கம்...? எங்கே? எங்கே அது? விஸ்கி பாட்டிலைத் திறந்து ஊற்றிக் கொண்டான். குமட்டியது. அப்படியே வாந்தி எடுத்தான். நாக்கு குழறியது. ''ஜி...ங்...வி!''

நிலகா ஓடி வந்து பார்த்து, அதிர்ந்து, உடனே டாக்டரை வரவழைத்தாள். டாக்டர் அமர்நாத் அவசரமாக வந்து, அவனைத் தொட்டு,

''சூர்யா! என்ன ஆச்சு?'' என்றார்.

(தொடரும்)

- வாழும் மகான்கள் – ஸ்வாமி ரங்கநாதானந்தா
- வெற்றி வேண்டுமா? தீட்டுங்கள் மனச்சித்திரம்!
- முதியோர் உணவு – சிறப்பு சமையல் குறிப்புகள்

கோலப்போட்டி – கோலாகலமான அறிவிப்பு

# THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

*An H.C. Kothari Group Company*

"Mashkur Buildings", 1 Krishnama Road, Nungambakkam, Madras 600 034. Tel: 476297, 474871, 474885, 471691

**Free tax consultancy for deposit holders in Madras city only. Please call the F.D. Department on 476297 for an appointment.**

* ITI is not responsible for any liabilities arising out of this tax consultancy service.

ICRA RATING
MAA—INDICATING
HIGH SAFETY

## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the Administrative Office and other branch offices of the Company.

### DEPOSIT SCHEMES:

| CUMULATIVE DEPOSIT SCHEME Period | Minimum Rs. 1000 and in multiples of Rs. 1000 25 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|
| For Rs. 1000 deposit amount payable on maturity | Rs. 1,364 | Rs. 1,584 | Rs. 1,815 | Rs. 2,107 |
| Effective annual yield | 17.74% | 18.80% | 20.37% | 22.14% |

**FIXED DEPOSIT SCHEME**

| Period in Months | Rate of Interest per annum |
|---|---|
| 25 | 15% Monthly |
| 36 | |
| 48 | |
| 60 | |

**RECURRING DEPOSIT SCHEME**

| Period in Months | Rate of Interest per annum | Maturity value for Rs. 100 |
|---|---|---|
| 25 | 15% Monthly Compounding | Rs. 2,950 |
| 36 | | Rs. 4,568 |

1. Interest warrants payable at par at all branches of S.B.I.
2. As per RBI Directives for repayment before maturity:
   (a) No interest will be paid upto 12 months (b) Above 12 months, 11% interest will be paid (c) Above 24 months, 1% less than the contract rate will be paid.
3. As per RBI directives, deposits will be repaid before maturity only after 6 months from the date of deposit.

Information required to be specified as per Non-Banking Financial Companies (Reserve Bank) Directions 1977, and Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules 1977, are given below.

(a) Name of the Company: THE INVESTMENT TRUST OF INDIA LIMITED. (b) Date of incorporation: 2nd August, 1946. (c) Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any: Business: Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc. The Company has no subsidiaries. Branches: New Delhi, Bombay, Bangalore, Mysore, Hyderabad, Vizag, Nellore, Trivandum, Cochin, Kottayam, Calicut, Pondicherry, Tirunelveli, Trichy, Coimbatore, Nagercoil, Madurai, Salem, Erode, Thanjavur, Vellore, Dindigul, Tuticorin, Hubli, Rajkot, Surat. (d) Brief particulars of the management of the Company: The Company is managed by the Chairman & Managing Director under the control and supervision of the Board of Directors.

(e) Name, address & occupation of the Directors

Mr. B.H. KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11/Nungambakkam High Road, MADRAS 600 034. Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858 Poonamalle High Road, Kilpauk, MADRAS 600 010. Business Executive & Management Consultant. Mr. G.K. SUNDARAM "Rasakondalu", Circuit House Road, COIMBATORE 641 018. Industrialist. Mr. G. CHIDAMBAR 101-A, Janakpuri, 2nd St., Off: Velachery Road, MADRAS 600 032. Former Managing Director - L.I.C. Mr. N. SRINIVASAN T-18, Sixth Avenue, Besant Nagar, MADRAS 600 090. Chartered Accountant. Mr. RAM GANAPATI No. 27, "Ashoka Crescent", D.L.F. Kutab Enclave Phase - I, Gurgaon, HARYANA 122 001. Former Chairman of B I F R. Mr. C.R. RAMAKRISHNAN "Meenakshi", No.4, Sir. P.S. Sivasamy Road, Mylapore, MADRAS 600 004. Former Joint Managing Director of Larsen & Toubro Ltd., Mr. M.R. SHAH 23/24, Woodlands Apartments, Peddar Road, BOMBAY 400 026. Business.

| (f) Profits of the Company before and after making provisions for tax for the three financial years immediately preceding the date of advertisement | Profit before depreciation and taxation (Rupees in lakhs) | Profit before taxation | Profit after taxation | (g) Dividend declared by the Company in respect of the said year (Rupees in lakhs percentage) Amount | Percentage |
|---|---|---|---|---|---|
| 31.3.92 | 312.81 | 187.44 | 183.19 | 56.10 | 28 |
| 31.3.91 | 256.00 | 150.13 | 150.13 | 36.81 | 25 |
| 31.3.90 | 199.90 | 87.90 | 72.90 | 36.81 | 25 |

| LIABILITIES | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-1991 | ASSETS | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-91 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 217.10 | 147.25 | Fixed Assets | 1571.25 | 1175.73 |
| Reserves & Surplus | 677.50 | 444.05 | Investments | 123.88 | 68.41 |
| Secured Loans | 1874.11 | 1883.15 | Current Assets | | |
| Unsecured Loans | 2332.05 | 1816.28 | Loans and Advances | 4793.06 | 4182.87 |
| Current Liabilities | 1496.89 | 1262.84 | Miscellaneous | | |
| Provisions | 105.88 | 103.39 | Expenditure | 15.24 | 9.95 |
| | 6503.43 | 5406.96 | | 6503.43 | 5406.96 |

Note: Contingent Liability not provided for: (i) On partly paid Shares and Debentures: Rs. 49,475 (ii) Sales tax on lease contracts under writ petitions: Rs. 20,34,009 (iii) Commitments in respect of contracts to be executed on capital account (since discharged): Rs. 8,12,000 (i) The amount which the Company can raise by way of deposits under Reserve Bank of India directions: Rs. 87.93 Crores. Aggregate of deposits actually held on the last day of the immediately preceding financial year, viz. 31.3.1992: Rs. 20.40 crores. (j) The Company has no overdue deposits other than unclaimed deposits. (k) It is hereby declared that (i) The Company has complied with the applicable provisions of the directions. (ii) The compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India and (iii) The deposits accepted by the Company are unsecured and rank pari passu with other unsecured liabilities.

The above text of this advertisement has been approved by the Board of Directors on 29.5.92.

(By Order of the Board)
For THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

V. Parthasarathy Secretary

Regd. Office:
"Kothari Buildings"
117, Nungambakkam High Road,
Madras 600 034.

Note: A copy of the text duly signed by a majority of the Directors of the Company has been filed with Reserve Bank of India, Bangalore.

**Deposits can be made at all our branches**

# நுகத்தடி மாடுகள்

## ரிஷபன்

என்ன கலபமாய் ஆண்களுக்குக் கோபம் வருகிறது. மனைவி என்றால் இளப்பமா? சீறினால் எதிர்க்காமல் கேட்டுக் கொள்ள...?

கை தன் போக்கில் அரிசி களைய, என் எதிரே விசு முகம் சிவந்து பேசிக் கொண்டிருக்கிறார்.

எல்லாம் என்னால்தானாம். மாதம் பாதி ஓடுவதற்குள் முதல் தேதி சம்பளம் முழுவதுமாய்க் கரைந்து... யாரிடம் உதவி கேட்பது என்று அலைய வேண்டியிருக்கிறதாம்.

பேசாதே. நீ நினைத்தால் செய்யலாம்.

அத்தனை கோபத்திலும் சிரிப்பு வருகிறது. என்னால் என்ன முடியும் என்று நினைக்கிறாய் என் புருஷனே? மாதத் தேவைகள் நீ அறிவாய். கைப் பணம் அளவும் தெரியும். இடைவெளியை ஈடுகட்ட ஒருவேளை கஞ்சி குடித்தால் மட்டுமே சாத்தியம். முடியுமா?

தொட்டுக் கொள்ளப் புடலங்காய் கூட்டா. எதுவும் பொரிக்கவில்லையா? வறுக்கவில்லையா? நாக்கு நீளத்தில் அடுப்பில் இலுப்பச் சட்டி ஏற்றப்பட்டுக் கடைசி சொட்டு எண்ணெய்யும் ஊற்றப்படுகிறது. இத்தோடு ஒன்றே முக்கால் லிட்டரும் காலி.

மாத ஆரம்பத்தில் நிரப்பப்பட்ட டப்பாக்களும், சம்படங்களும், எண்ணெய்த் தூக்குகளும், விஸ்தாரமாய்க் கடலை மாவுக் கனவுகளைத் தருகின்றன. சாப்பிட்ட ஜோர் மறந்து நடுவிலேயே புகைச்சல்.

''என்னால இனிமே தாக்குப் பிடிக்க முடியாது. பைத்தியமே பிடிச்சுரும் போல இருக்கு...''

சண்டை வேண்டாம். உக்கிரம் வேண்டாம்.. வா.. கை குலுக்கு. என்ன வழி ஆராயலாம்.. குறைந்தபட்சம் உன் மன இறுக்கம் தளர்த்துகிறேன். உன் பலம் புலப்படும். வெளியில் பணம் பல ரூபத்தில் காத்திருக்கிறது. சம்பாதித்து வரலாம்.

மாட்டார்! எப்போதும் சண்டைதான். எல்லாம் என்னால்தான். குழந்தை வழக்கம் போல மிரண்டு பார்க்கிறது. பின்னொரு சமயம் விமர்சனம் வெளிப்படும்.

'அப்பா ரொம்ப மோசம்..'

மழலைக்குச் சிரித்தால் இவருக்கு ரோஷம் வரும்.

'இல்லைடி கண்ணே. அப்பா முரடு இல்லை... பாவம்... பணம் இல்லாத கஷ்டம்தான்!' என்கிற நீள வசனம் ஷாம்லியிடம் மட்டுமே பேச முடியும். புஷ்பாவிடம் முடியாது.

அவள் என்னைப் போல. இரண்டு வயசில் சத்தத்துக்கு அதிர்கிறவள். எதுவானாலும் அடிக் குரல் போதும். இரைச்சல் எதற்கு என்ற விவேகம்.

சூடாகக் காப்பி டம்ளரை நீட்டினேன்.

அதற்கும் சீறிப் பாய்ந்தார்.

''என்ன, குடிச்சுட்டு தெம்பா கத்தச் சொல்றியா...?''

''இல்லே. டம்ளரைத் தரச் சொல்றேன்...''

நகைச்சுவை புரியாத மனுஷன் இல்லை. நண்பர்கள் மனைவியோடு வந்தால் சட்டென்று முகம் மாறும். தோரணை மாறும். நிமிஷத்துக்கு ஒரு சிரிப்பு. ஒரு அறுவை. எப்படித்தான் சாத்தியம் ஆகுமோ...

எல்லா மனைவிகளுக்கும் இது விஷயத்தில் ஒரே மாதிரி மனக் குறைதான் போலிருக்கிறது.

நாராயணன் மனைவி ஒரு தடவை வாய் விட்டே சொல்லி விட்டாள்.

'இங்கே இப்படி ஜோக் அடிக்கிறார். வீட்டுல சிரிப்பே வராது.'

ஹால் ஒரு நிமிடம் பொலிவிழந்தது. நாராயணன் கவனம் என்னை விட்டு விலகி, தன் மனைவியைப் பரிதாபமாய்ப் பார்க்க வைத்தது.

''போன மாசங் கூட ஐந்நூறு ரூபாய் கடன் வாங்க வேண்டியதாப் போச்சு. ஞாபகம் இருக்கா?''

கஷ்டமாகத்தான் இருக்கிறது. என்ன செய்ய? வேண்டுமானால் கல்யாணத்தைத் தவிர்த்திருக்கலாம். இனி எதுவும் செய்ய இயலாது. புஷ்பா பிரத்தியட்ச சாட்சி - ஐந்து வருஷ தாம்பத்தியத்துக்கு. அவளைக் கூட முடிந்தவரை தள்ளிப் போட்டோம்.

கல்யாணமான புதிதில், விகவிடம் கண் பனிச்சிடும் அழகை இருட்டிலும் ரசிக்க முடியும். உதடு விரியாமல் ஓரச் சிரிப்பை 'ஒன்ஸ்மோர்' கேட்கத் தோன்றும்.

எல்லாம் குறைந்த காலத்துக்குள் காணா மல் போயின. சிடுசிடுவென்ற சுபாவம் இத்தனை நாட்களாக மறைத்து வைத்ததாய் இருக்க வேண்டும். எல்லாம் புது மனைவி என்ற ஜோருக்காக.

புஷ்பா வெளியில் ஓடிப் போனது. என்னால்தான் முடியவில்லை. அது இவரை நிராகரிக்கிற மாதிரி... முதுகில் குத்தின மாதிரி படும். இன்னும் அலறுவார். வேண் டாம்.

ஆனால் இந்த நிமிஷம் அவருக்குத் தனிமை வேண்டும். அமைதி வேண்டும். நிதானம் வந்தால் பிரச்னை புரியும். தீர்வும் புரியும்.

**எ**ன் அண்ணனைப் போல அவ்வளவு கஷ்டப்பட்டவனும் அல்ல. நான் மூன்றா வது தங்கை. மூன்று பேரைக் கரையேற்றின புண்ணியவான். என்றாவது சகோதரிகள் மூவரும் ஒன்று சேரும் போது அவன் தலை தான் விடிய விடிய உருளும்.

'இவனை யார் அவசரப்பட்டுக் கல்யா ணம் பண்ணித் தரச் சொன்னது...'

'நாம எவ்வளவு நிம்மதியா இருந் தோம்..'

'இஷ்டப்பட்டா சமைக்க... இல் லேன்னா.. ஹோட்டல்ல வாங்கி...'

'ச்சே.. ஒரு மூணு முடிக்க... என்னமா நிசை இருப்பிடுச்சு.. நுகத்தடி மாடுகளா...'

என் கணவனுக்கு ஒரே தங்கை. அதுவும் காதல் கல்யாணம். காதலித்த பையன் கையில் கரண்டி பிடிக்கிறவன்.

அந்தத் தொழிலோடு நாம் தொடர்பு படுத்தாத வசீகரம். புன்சிரிப்பு. டிப்டாப் பாக டிரஸ் செய்து கொண்டு வந்தால் 'எந்த கம்பெனி டெபுடி மேனேஜர்' என்று கேட்க லாம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபத் தில்... பின்னிருக்கும் சமையற்கட்டில், சற்றே அழுக்கு வேட்டியில் பார்த்தும் பிர மிக்கலாம்.

என்ன தொழிலானால் என்ன.. நேர்மை, கைசுத்தம் - பொய் இல்லை. கட்டி னவளைக் கைவிடும் உத்தேசம் இல்லை.



'கடைசி வரைக் காப்பாற்றுவேன்..' பிளாட் வாங்கியாச்சு. இப்போது காண்டிராக்ட் எடுத்து, கல்யாண வேலைகளில் கணிச மாய்ப் பணம் நிற்கிறது.

இவர் தங்கைக்கும் படிப்பு வர வில்லை. பள்ளி இறுதி வகுப்பு வரை ஏதோ ஒரு உந்து சக்தி உதவியது. சமையல் காதல னுக்கு இவள் படிப்பு அனாவசியம். நேசம் மட்டுமே கொட்டை எழுத்துக்களில். 'வா' என்றான் இரு கரம் நீட்டி.

யார் யாரோ சமாதானம் செய்தார்கள். பின்னால் வம்பு பேசினார்கள். சிக்கனமாய், எந்த உறவுக்காரனையும் கூப்பிடாமல் கல் யாணம் செய்தார்கள் - 'ஓடிப்போனா நமக்குத்தான் அவமானம்..'

'மாப்பிள்ளை என்ன பண்றார்?'

'பிசினஸ். கை நிறைய பணம்.'

கலபமாய் பதில் சொல்ல முடிகிறது. அதிகம் பழகாத மனிதர்களிடம்.

இவருக்கு மட்டும் இன்னும் வீம்பு விட வில்லை. சொன்ன வார்த்தை.. 'உன் வீட்டு வாசப்படி மிதிக்க மாட்டேன்.. போடி! இந்தக் கல்யாணம் நீயா தேடிக்கிட்டது.. நாளைக்குக் கண்ணைக் கசக்கிக்கிட்டு இந்த வாசப்படி ஏறு - அப்புறம் பார்க்கலாம்!' இத்யாதி மிரட்டல்கள்.

இவர் வார்த்தை காப்பாற்றப்பட்டது. தனிக்குடித்தனம் வந்து விட்டோம் நாங்கள். தங்கை 'இவர்' வீட்டு வாசப்படி இன்னும் ஏறவில்லை.

அவள் கல்யாணச் செலவு கூட இவ ருக்கு இல்லை. என்ன.. சுபாவத்தில் கொஞ் சம் செலவாளி. கையில் காசிருந்தால் போதும். செலவழித்து விட்டு மறு காரியம். இருட்டில் நான் 'ரதி'யாவேன். பர்ஸ் காலி என்றால் வேதாளம் முருங்கை மரம் ஏறும். 'பெண்டாட்டியா நீ... உன்னாலதான் எல்லா கஷ்டமும்...' இப்போதும் அதைத் தான் சொல்லி விட்டுத் தடதடவென்று வெளியே போகிறார். இனி இரண்டு, மூன்று மணி நேரத்துக்கு வீட்டில் அமைதி.

அவ்விய நேசங்களுக்குக் கடன் உதவி கேட்டு வீட்டின் பிரதமர் பயணம். செய்தித் தான் தலைப்பாய் மனசுக்குள் விரிந்தது.

வெகு நேரம் கழித்துத்தான் திரும்பி னார்.

கையில் ஒரு பை நிறைய பழங்கள்.

லேசாக என்னுள்ளும் கோபம் வந்தது. கடன் வாங்கிய பணத்தில்... இது என்ன டாம்பீகம்...

''இந்தா பிடி.... புஷ்பாக்குக் கொடு....''

வாங்கி அலிச்சையாய்க் கட்டிலில் வைத்தேன்.

ஷர்ட்டைக் கழற்றி ஹேங்கரில் மாட்டி னார்.

''நல்லாத்தான் இருக்கு வீடு.. எல்லா பர்னிச்சரும் இருக்கு... ஃப்ரிட்ஜ் கூட இப்போ வாங்கியாச்சு...''

'யாரென்று' கேட்பேன் என்று நினைத் திருக்க வேண்டும். நான் கேட்கவில்லை.

''...அவதான் மூஞ்சியைப் பார்த்தே புரிஞ்சுகண்டு பையில திணிச்சுட்டா.. பொல பொலன்னு கண்ணுல தண்ணி.. பாசம் போகுமா?''

லேசாக ஏதோ புரிந்தது.

''மாப்பிள்ளையும் ரொம்ப தங்கம்.. அடிக்கடி வாங்கோ. இவ முகத்துல இப்பத் தான் சிரிப்பையே பார்க்கறேன்னார். நீங் கள்ளா ரொம்ப உசுராமே இவளுக்கு... தெனம் ஏதாவது ஒரு கதை சொல்லிண்டே இருப்பான்னார்...''

ஏதோ பொட்டலத்தைக் கொடுத்தார்.

''பச்சைக் கற்பூரம்.. கல்யாணத்துல கிடைக்குமாம். என்ன வாசனை பாரு..'' என்றார் குழந்தை போல உள்ளங்கை முகர்ந்து.

எனக்குள் வார்த்தைகள் மறந்தன.

''..இந்தா.. செலவுக்கு வச்சுக்கோ...''

இரண்டு நூறு ரூபாய்த் தாள்கள். பச்சைக் கற்பூர வாசனையுடன். மூன்றாவது தாளை ஞாபகமாய்த் தன் பர்சில் வைத்துக் கொண்டார்.

எனக்கு ஏனோ அழத் தோன்றியது.

---

கி. பி. நான்காம் நூற்றாண்டில் பார சீகத்தை ஆண்ட ஷா ஹொர்முஸ் இறந்து விட்டார். அப்பொழுது அவருடைய மனைவியான பட்டத்தரசி கர்ப்பமுற் றிருந்தாள். உடனடியாக நாட்டை ஆள வாரிசு இல்லாததால் அரசைக் கைப்பற்ற பலர் முயன்றனர். ஜோசியர்களோ அர சிக்கு ஆண் குழந்தைதான் பிறக்கும் என்று கூறினர். எனவே அரசியைப் படுக்க வைத்து அவள் வயிற்றின் மீது கிரீடத்தை வைத்து முடிசூட்டு விழா நடத் தினர். வயிற்றில் இருக்கும் அரசனுக்கு மரியாதை செய்து வாழ்த்தினர். அந்தக் குழந்தைதான் பாரசீகத்தை நீண்ட காலம் அரசாண்ட இரண்டாவது சாபர்.

- 'அதிசய அறிவுத் துணுக்குகள்' என்ற நூலிலிருந்

தகவல் : ஏ. ஆர். எம். இஸ்மாயில்





# முற்றுகை

**கதை** : சுமார் பதினாறு பேரை உயிரோடு கொளுத்தி விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுத் தண்டிக்கப்படும் கதாநாயகன் சிறையிலிருந்து தப்பித்து விட, நான்கு புறமும் நீர்சூழ்ந்து ஒரு தீவாக விளங்கும் அவன் சொந்தக் கிராமம் அவனுக்கு அடைக்கலம் தந்து போலீசிடமிருந்து பாதுகாத்து வருகிறது.

'ஏன்?' என்பது சஸ்பென்ஸ் நம்பர் ஒன்று.

ஒரு போலீஸ் படையுடன், அந்தக் குற்றவாளியைப் பிடித்தே தீருவது என்கிற தீவிர முடிவுடன், வந்து தண்டுஇறங்கும் பெண் போலீஸ் அதிகாரியால் மேற்கொண்டு எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாத நிலை. காரணம், பள்ளிக் குழந்தைகளை அவன் பிணைக்கைதிகளாகப் பிடித்து வைத்திருக்கிறான் என்கிற வதந்தி.

'இது உண்மையா?' என்பது சஸ்பென்ஸ் நம்பர் இரண்டு.

இவற்றை அஸ்திவாரமாகக் கொண்டு எழுவதுதான் திரைக்கதை.

***அருண்பாண்டியன்*** : பொருத்தமான நடிப்பு. சண்டைக் காட்சிகளில் புகுந்து விளையாடுவதற்கு ஏற்ற கம்பீர உடற்கட்டு. விளையாடுகிறார். தான் குற்றவாளியாக்கப் பட்ட கதையை இவர் விவரிக்கும் ஃப்ளாஷ் பேக் சற்று நீ...ளமாக இருந்தாலும் விறு விறுப்புக்குக் குறைவில்லை.

***ரஞ்சிதா, பானுப்ரியா*** : பின்னவர்தான் கதாநாயகி என்றாலும் முன்னவரின் பாத்திரப் படைப்பும், அவர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளும், அவருடைய சோக முடிவும் மனத்தில் ஆழப் பதிந்து போய் பின்னவரை நம் நினைவிலிருந்தும் பின்னடையச் செய்து விடுகின்றன. ஆற்றல் நிறைந்த பானுப்ரியா விஜயசாந்தி பாணி போலீஸ் பாத்திரத்தையெல்லாம் ஏற்கத்தான் வேண்டுமா?

***சீதா*** : வந்து போவது சிறிது நேரமே என்றாலும் இவருடைய திறமைக்கு நிறையவே தீனி. ஒருபுறம் அமைச்சரைக் கொலையாளி நெருங்கிக் கொண்டிருக்க, இன்னொருபுறம் இவர் விதவைக் கோலம் பூணுவதற்கான ஏற்பாடுகள் ஒவ்வொன்றாக நிறைவேற... இறுக்கம் கூடுவதில் இயக்குனர் வெற்றி பெறுகிறார்.

***ஆர்.பி. விஸ்வம்*** : நயமான வில்லன். கூடவே இவர் பேனாவிலிருந்து பிறந்திருக்கும் நயமான வசனங்கள்.

தடம் புரளாமல் செல்லும் கதை. படபடக்கச் செய்யும் முடிவு. வலுவான முற்றுகை.

— சி.ஆர்.கே.



# சக்கரவர்த்தித்

## 25. மரவுரி தரித்தார்கள்!

**ரா**மனுடன் சீதையும் வனம் போவது என்று நிச்சயமாகி விட்டது. ஏழை அந்தணர்களை அழைத்துச் சகல பொருள்களையும் தானம் கொடுத்து விட்டு வனவாசத்திற்குச் சீதை ஆயத்த மாகி விட்டாள்.

லக்ஷ்மணனும் அண்ணனுக்குச் சகா யமாக வனம் போகத் தீர்மானித்து ராம னுடைய சம்மதமும் பெற்றான். மூவரும் தந்தை தசரதனிடம் விடை பெற்றுக் கொள்ளுவதற்காகச் சென்றார் கள்.

**தெ**ருக்களிலும் ராஜ வீதியின் இரு பக்கத்திலுமுள்ள மாளிகைகளின் உப் பரிகைகளிலும் சாளரங்களின் பின்னா லும் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக நின்று, ராமனும் சீதையும் லக்ஷ்மண னும் காலால் நடந்து போவதைக் கண் டார்கள்.

அடங்காத துக்கமும் வியப்பும் கோபமும் அடைந்து ''இப்படியும் ஒரு அரசன் உண்டா? இத்தகைய ராஜகுமா ரனை எவனாவது வனத்துக்கு அனுப்பி விடுவானா? ஐயோ பாவம்! காலால் தெருவில் நடந்து போகிறாளே, சீதை! வனத்தில் வெயிலும் மழையும் இவள் தாங்குவாளா? இது என்ன விபரீதம்! சரி, இந்த நகரத்தை விட்டு நாம் அனைவரும் ராஜகுமாரர்கள் செல்லும் வனத்துக்குப் போக வேண்டியதுதான். வீட்டிலுள்ள பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு நாமும் வனம் செல் வோம். ராமன் இருக்கும் வனமே நமக்கு அயோத்தியை; இந்த நகரம் பாம்புகள் புகும் புற்றும், எலிகள் தோண்டிய வளைகளுமாக வீடுகளெல் லாம் பாழாகப் போக வேண்டியது தான். கைகேயி இங்கே அரசு புரியட் டும். நாம் போகும் வனத்திலிருக்கும் காட்டு மிருகங்களும் பிணம் தின்னும் பறவைகளும் அந்த இடத்தை விட்டு விட்டு அயோத்திக்கு வந்து விடும். இதுவே காடா கும், அது நகரமாகும்.''

இவ்வாறெல்லாம் மக்கள் பேசிய பேச்சு ராமன் காதில் விழுந்தாலும் அதை அவன் கவனிக்காமல் சென்றான்.

**அ**ரசனுடைய மாளிகையின் வாயி லண்டை துக்கம் நிறைந்த முகத்தோடு மூலையில் உட்கார்ந்திருந்த சுமந்திர னைப் பார்த்து ராமன், இனிய குரலில் ''மூவரும் அரசனைக் காண வந்திருக் கிறோம். தெரியப்படுத்தி உள்ளே வரு வதற்கு அனுமதி கேட்டு வரவேண் டும்'' என்று சொன்னான். சுமந்திரனும் அவ்வாறே சொல்லுவதற்குச் சென் றான்.

ராகுவால் பீடிக்கப்பட்ட சூரிய னைப் போல், சாம்பல் நிறைந்த அடுப்புபோல், நீர் வற்றிய தடாகத் தைப் போல் காட்சி தந்தான் சக்கர வர்த்தி.

சுமந்திரன் கைகூப்பி, துக்கத்தால் பேச்சு தடுமாறிச் சொன்னான்:

''அந்தப்புர வாயிலில் ராஜகுமாரன் நிற்கிறான். பிராமணர்களுக்குத் தன் பொருள்களைக் கொடுத்துவிட்டு - மங் களம் ஆகுக, - எல்லாரிடமும் சொல்லி விடை பெற்றுக் கொண்டு தண்ட காரண்யம் போவதற்கு முன் தங்களைக் காண விரும்புகிறான்'' என்றான். மன்னன் அழைத்து வரச் சொன்னான்.

**ரா**மன் வந்து கொஞ்சம் தூரத்திலே நின்று அஞ்சலி செய்தான். ராமனைக் கண்டதும் படுத்திருந்த அரசன் குதித் தெழுந்து மகனைக் கட்டியணைத்துக் கொள்ளச் சென்றான். கைகளை விரித் துக் கொண்டு தாவிப் போனவன் ராமனை யடைவதற்கு முன்னே மூர்ச்சை அடைந்து தரையில் விழுந் தான்.

ராமனும் லக்ஷ்மணனும் கீழே விழுந்த மன்னனைத் தூக்கிப் படுக்கையில் உட்கார வைத்துத் தடவிக் கொடுத்தார்கள்.

ராஜாஜி

# திருமகன்

பிறகு ராமன், ''பெருமானே! விடை பெற்றுக் கொண்டு போக வந்திருக்கிறோம். என்னுடன் லக்ஷ்மணனும் வைதேஹியும் வனத்துக்கு வருகிறார்கள். எவ்வளவு சொல்லியும் கேட்காமல் அவர்கள் என் கூடப் போக வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். எங்களுக்கு அனுமதி கொடுத்து, ஆசிர்வதித்து அனுப்புவீராக'' என்றான்.

அப்போது தசரதன், ''கைகேயிக்கு நான் கொடுத்த வரத்தால் நான் கட்டுப்பட்டேன். நீ கட்டுப்படவில்லை. நீ என்னை மதிக்காமல் உன் பலத்தால் அயோத்தியைப் பற்றிக் கொண்டு அரசனாக இருக்கலாமே!'' என்றான்.

முன்னால் மனத்தில் மட்டும் இருந்த கருத்தை இப்போது அரசன் வியக்தமாகச் சொன்னான்.

''தாங்கள் இன்னும் ஆயிரம் வருடங்கள் ஆண்டு வரவேண்டிய இந்த ராஜ்யத்துக்கு நான் ஆசைப்படவில்லை. நான் பதினான்கு வருஷம் அரண்ய வாசம் செய்து விட்டுத் திரும்பி வந்து உம்முடைய பாதங்களைத் தொட்டு வணங்குவேன்'' என்றான் சக்கரவர்த்தித் திருமகன். அரசனுடைய ஆசை இல்லை என்று தீர்ந்தது.

''குலத்தின் புகழைப் பெருக்குவாய், மகனே! போய்த் திரும்பி வா. மங்களமாகுக. பயம் என்பது உன் வழியை விட்டு விலகி நிற்கக் கடவது. தருமத்தினின்று பிறழாத உத்தமனே! திடசங்கற்பம் கொண்ட வீரனே! யாரும் உன் எண்ணத்தை மாற்ற முடியாது. ஆனால் இன்றே போக வேண்டாம். ஒரு ராத்திரி இருந்து விட்டுப் போகலாம். உன்னை நான் மனதாரப் பார்த்துத் திருப்தி அடைய விரும்புகிறேன். நாளை விடிந்ததும் நீ போகலாம். ராமா! நான் கைகேயியால் வஞ்சிக்கப்பட்டேன். அவளுக்கு நான் தந்த வரத்தால் கட்டுப்பட்டு இந்தப் பாப காரியத்தைச் செய்ய வேண்டியதாயிற்று. அவள் என்னை மோசம் செய்து விட்டாள். சாம்பல் பூத்து மூடிய நெருப்பைப் போல் மறைந்திருந்த அவளுடைய எண்ணத்தை நான் அறியாமல் ஏமாந்து போனேன். அவள் வலையில் சிக்கி விட்டேன். நீயோ தந்தையின் சொல்லைச் சத்தியமாக்கியே தீருவேன்,



தந்தையைப் பொய்யனாக்கி விடமாட்டேன் என்று ராஜ்யத்தையும் நாட்டையும் விட்டு வனம் போகத் தீர்மானித்து விட்டாய். உலகத்தில் உன்னைப் போல் ஜேஷ்ட குமாரன் வேறு யார் இருக்கிறான்? இந்த அனர்த்தம் என் சம்மதம் பெற்றதல்ல என்று சத்தியமாகச் சொல்லுகிறேன்'' என்று பரிதாபமாக அரசன் கூறினான்.

அந்திகாலத்தில் ராமனுடைய அன்பை இழக்காமல் உயிர் நீக்க வேண்டும் என்பது தசரதனுடைய ஆசை.

''தந்தையே! பரதனுக்குச் சொல்லியனுப்பி நீர் என் தாய்க்குத் தந்த வரத்தைப் பூர்த்தி செய்யவும். ராஜ்யத்தை நான் மனத்தால் துறந்து விட்டாயிற்று. என் உள்ளம் இப்போது வனத்தைப் பற்றி நிற்கிறது. உம்முடைய மனத்தில் ஒரு குறையும் வருத்தமும் இல்லாமல் நீர் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து, ஆசீர்வதித்து முடிக்க வேண்டும். நான் இப்போது இந்த ராஜ்யத்திலாவது வேறு சம்பத்திலாவது ஒரு சிறிதும் மனத்தை வைக்கவில்லை. தந்தையே, துக்கத்தை முற்றிலும் அகற்றிக் கொள்வீராக கண்ணீர் விடாதீர். சமுத்திரம் உலர்ந்து போகுமா? அதைப் போன்ற தீரராகிய நீர் நிலையை இழக்காதீர். உம்மைச் சத்தியவாதியாக்குவதே என் ஆசை. உம்மைப் பொய்யனாக்கி விட்டு நான் மற்றப் பொருள்களை வைத்துக் கொண்டு என்ன சுகம் சம்பாதிப்பேன்? நீர் மனத்தை முற்றிலும் சாந்தப்படுத்திக் கொண்டு துக்கத்தை விலக்கி விட வேண்டும். நான் வனத்தில் ஆனந்தமாகக் காலம் கழிப்பேன். வனத்தில் உள்ள அழகும் சுகமும் வேறு எங்கே கிடைக்கும்? தகப்பனாராகிய நீரே எனக்குத் தெய்வம். ஆனபடியால் நான் வனம் போவது தெய்வ வாக்கின்படியாகும். பதினான்கு வருஷங்கள் தீர்ந்த பின், என்னை மறுபடி பார்ப்பீர். விசனப்படாதீர். இந்த ராத்திரி இருந்து நாளை போகச் சொல்லுகிறீர். அதில் என்ன பயன்? இன்று போலவே நாளையும். ஆனபடியால் இன்றே போக அனுமதி தருவீராக'' என்றான்.

அதன் பிறகு தசரதன் சுமந்திரனுக்குச் சொன்னான் : ''சரி, அப்படியானால் நம்முடைய சேனைத் தலைவர்களுக்குச் சொல்லி நல்ல சதுரங்க சேனை ஒன்றைத் தயார் செய்து ராமனுடன் வனம் போக உடனே உத்தரவிடுவாய். ராமன் காட்டில் சுகமாக ரிஷிகளுடன் காலம் கழிப்பதற்கு வேண்டிய சகல பொருள்களும் திரட்டி அமைத்துச் சேனையுடன் அனுப்பிவிட வேண்டியது. தனம், தானியம், ஆட்கள், எல்லாம் ஒரு குறையுமின்றித் திரட்டி அனுப்ப வேண்டியது.''

பாவம், தசரதன் வனவாசம் என்றால் அரசர்கள் செய்யும் சுற்றுப் பிரயாணம் போல் செய்து விடலாம் என்று பார்த்தான்.

கைகேயி, பக்கத்திலிருந்தவள், சிரித்தாள். ''அப்படியா? வரத்தை மிக அழகாகப் பூர்த்தி செய்கிறீர்கள்! 'பரதனுக்கு ராஜ்யம் கொடுத்தேன்' என்று சொல்லி ராஜ்யத்திலுள்ள செல்வத்தை

யெல்லாம் வாரி எடுத்து ராமனுக்குக் கொடுத்து விட்டு ராஜ்யத்தைப் பாழாகச் செய்து அதைப் பரதனுக்குத் தரு கிறீரா?'' என்றாள் கைகேயி.

தசரதன் கோபாவேசமாகப் பேசப் போனான். ராமன் அமாத்தியர்களைப் பார்த்துச் சொன்னான்:

''வணக்கத்துடன் நான் கேட்டுக் கொள்கிறேன். நான் வனம் போக நிச்சயித்தது இந்த வகையில் அல்ல. ராஜ்ய போகங்கள் அனைத்தையும் விட்டு விட்டு, தவசிகள் வாழ்க்கை வாழ நான் வனம் செல்லுகிறேன். பரி வாரமும் பொருள்களும் எனக்கு எவ் விதத்தில் உதவும்? யானையைத் தானம் செய்த பின் யானையைக் கட்டும் கயிற்றில் ஆசை வைப்பதா? தயவு செய்து மரவுரியைக் கொண்டு வரச் சொல்லுக! மண்வெட்டியும் கூடையும் கொண்டு வரச் சொல்லுக. அவை போதும்'' என்றான்.

கைகேயி ஓடிப்போய்த் தயாராக வைத்திருந்த மரவுரியைக் கொண்டு வந்து ராமனுக்குத் தானே வெட்கமில் லாமல் கொடுத்தாள். உடனே அவ் விடத்திலேயே ராமன் மரவுரியை உடுத்திக் கொண்டான். ரிஷியைப் போல் பொலிவடைந்தான். லக்ஷ்மண னும் தன் ஆடையை அவிழ்த்து மர வுரியைத் தரித்தான். தசரதன் இதை யெல்லாம் செய்கையற்றுப் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

பிறகு சீதைக்காகவும் மரவுரி கொண்டு வந்தாள் கைகேயி. அதை வாங்கிச் சீதை இன்னது செய்வது என்று தெரியாமல் ஒரு க்ஷணம் திகைத்து நின்றாள். அவள் அதற்கு முன் இத் தகைய ஆடையை உடுத்தினதில்லை யல்லவா!

பக்கத்தில் கந்தர்வ ராஜனைப் போல் அழகு வீசிக் கொண்டு நின்ற ராமனைப் பார்த்துக் கொஞ்சம் கூச்சத் துடன், ''இதை எப்படிக் கட்டிக் கொள் வது, சொல்லுவீர்'' என்றாள்.

ராமன் அதை எடுத்துச் சீதை உடுத்தி யிருந்த பட்டின் மேல் மரவுரியையும் உடுத்தித் தானே முடி போட்டான். அச் சமயம் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் புர ஸ்திரீகள் அனைவரும் 'கோ!' என்று அழுதார்கள். தசரதன் நினைவு இழந்து விட்டான்.

மூர்ச்சை தெளிந்த பிறகு, கைகேயியை அனைவருக்குமெதிரில் தசரதன் மிகக் கடுமையாகத் திட்டி னான். ஆனால் அவள் அதைப் பொருட் படுத்தவில்லை. தவிர அவனால் இப் போது என்ன செய்ய முடியும்? சீதை வனம் போவது கைகேயிக்காக அல்ல. ராமனுடன் வனம் போவதிலேயே அவள் சுகம் கண்டாள். யார் சொல்லி யும் அவள் நிற்க மாட்டாள். போகும் போது தரையைப் பார்த்த வண்ணம் அரசனை வணங்கி ராமன் சொன்னான்:

''தந்தையே! தாய் கௌசல்யா தேவியை இவ்விடம் விட்டு விட்டுப் போகிறேன். ஒப்பற்றவள். யார் பேரி லும் அவளுக்குக் கோபமில்லை. மக ராஜனே! அவளைச் சரியாகப் பார்த்துக் கொள்ளவும். என்னை விட்டுப் பிரிந்து இதற்கு முன் அவள் பார்த்திராத துக்கத்தில் - பெருந் துயரக் கடலில் - அவள் மூழ்கினாளாயினும் உமக்காக உயிரை வைத்துக் கொண்டிருக்கிறாள். நான் வனத்திலிருந்து திரும்பி வரும் போது அவளை நான் இங்கேயே காண வேண்டும். யமாலயத்தில் தேடும்படி நேரிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று துக்கம் தாங்காமல் சொன்னான்.

ராமன் இப்படிச் சொல்லி விட்டு வெளியே செல்லும் காட்சியைப் பார்க்கக் கிழ அரசனால் சகிக்க முடிய வில்லை. கண்களைக் கையால் மூடிக் கொண்டான்.

(தொடரும்)

இன்று சகஜமாகப் புழங்கும் உப்பு ஒரு காலத்தில் அரிய பொருளாகக் கருதப் பட்டது. எத்தியோப்பியாவில் உப்பால் திரப்பப்பட்ட வில்லைகளே நாணயங்க ளாகப் பயன்படுத்தப்பட்டன. கிரேக்க நாட்டில் ஒரு அவுன்ஸ் உப்பின் விலை ஒரு அவுன்ஸ் தங்கமாக இருந்தது. கடின மாக உழைக்கக்கூடிய இளம் அடிமை களைத் துலாபாரத்தில் உப்பின் எடைக்கே விற்பது வழக்கம்.

- அ. ஷண்முகசுந்தரம்





# ஓய்வுக் காலத்திலே...

**ஜனனி**

தோட்டத்தில் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு இருந்தேன்.

வாசலில் துரைசாமி நடந்து போய்க் கொண்டிருந்தார். ஒரு கையில் பை நிறையச் சாமான்கள். இன்னொரு கையில் ஐந்து லிட்டர் மண்ணெண்ணெய்.

ரேஷன் கடைக்குப் போய் வருகிறார் போலும்!

என்னுடன் பணிபுரிந்தவர்தான். எனக்கு ஆறு மாதங்கள் முன் ஓய்வு பெற்றவர்.

இந்தக் காலனி எங்கள் கம்பெனியில் பணிபுரிபவர்களுக்காகத் தனியாக உருவாக்கப்பட்டது. நாங்கள் இருவரும் ஒரே ஆண்டில்தான் மனைகள் வாங்கி வீடு கட்டினோம்.

துரைசாமிக்கு ஒரு பிள்ளை; ஒரு பெண். பெண் கல்யாணமாகி வெளியூரில் இருக்கிறாள்.

காலை ஐந்து மணிக்குப் பால் வாங்கிப் போவார். ஏழு மணிக்குக் கறிகாய்க் கடையில். எட்டரை மணிக்கு பேரப் பையனைப் பள்ளிக்கூடத்தில் கொண்டு போய் விட்டு விட்டு வருவார். பத்தரை மணிக்குப் பதைபதைக்கிற வெயிலிலே எலக்டிரிக் பில்லோ, டெலிபோன் கட்டணமோ, தண்ணீர் வரியோ கட்டப் போவார். இல்லாவிட்டால் பாங்கில் பணம் போட, எடுக்க - ஏதாவது வேலை நிச்சயம் இருக்கும். பகல் ஒரு மணிக்குப் பேரனுக்குச் சாப்பாடு கொண்டு போய்த் தானே ஊட்டிவிட்டு வருவார். இரண்டு மணிக்கு மறுபடி பால் வாங்க. மூன்றரை மணிக்குப் பேரனைத் திருப்பிக் கூட்டி வர. அப்படி என்னதான் கடிதப் போக்குவரத்து இருக்குமோ - சரியாக மாலை ஐந்து மணிக்குக் கடைசிக் கட்டைப் பிடிக்கத் தபால் ஆபீஸிற்கு ஓடுவார். திரும்பி வந்து செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவார்.

அலுவலகத்தில் துரைசாமி வேலை செய்து நான் கவனித்திருக்கிறேன். எட்டு மணி என்றால் அப்படி ஒரு கணக்கு. ஒரு நிமிஷம் முன்னால் வரமாட்டார். ஒரு நிமிஷம் பின்னால் கிளம்ப மாட்டார். இடைவேளை அறுபது நிமிடங்களையும் முழுமையாக உபயோகப்படுத்திக் கொள்வார்.

எனக்கும் பிள்ளைகள் இருக்கிறார்கள். என் கூட இல்லை. ஒருவன் பம்பாயில். இன்னொருவன் பெங்களூரில். இருவருக்கும் கல்யாணமாகிக் குழந்தைகளுடன் இருக்கிறார்கள். என்னைக் கூப்பிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். நான் போக



வில்லை. இனியும் போக மாட்டேன். போனால் இந்தத் துரைசாமி மாதிரி நான் நாள் முழுவதும் உழைக்க வேண்டும்!

இரண்டு நாட்கள் சென்றிருக்கும். கடைத் தெருவிற்குப் போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த துரைசாமி என் வீட்டு வாசலில் ஏதோ கல்லில் இடறி விழுந்தார். எப்படியோ சமாளித்து எழுந்து விட்டார். இருந்தாலும் இடதுகால் கட்டை விரல் பெயர்ந்து ரத்தம் கொட்டியது.

நான் போய் அவரைக் கைத்தாங்கலாக உள்ளே கூட்டி வந்தேன். காயத்தைக் கழுவி மருந்திட்டுக் கட்டுப் போட்டேன்.

தினமும் அவர் மணிக்கு மணி அலைவதைப் பார்த்து நான் படும் வேதனையை அவருக்கு எடுத்துரைத்தேன்.

''ஏன் துரைசாமி உங்களுக்கு இந்த சிரமம்? நீங்கள் சம்பாதித்து வைத்திருக்கிறீர்கள். உங்கள் பிள்ளை முரளி, மருமகள் லலிதா இரண்டு பேரும் சம்பாதிக்கிறார்கள். ஒரு வேலைக்காரனையோ, வேலைக்காரியையோ போட்டுக் கொள்ள வேண்டியதுதானே. உங்களைச் சொல்லிக் குற்றம் இல்லை. உங்கள் பிள்ளையும் மருமகளும் பார்த்தும் பார்க்காதது போல இருக்கிறார்களே!''

துரைசாமி தன் கால் வலியையும் பொறுத்துக் கொண்டு கடகடவென்று சிரித்தார்.

''நோ.. ராகவன்! என் பிள்ளை, மருமகள் இரண்டு பேரும் என்னை ஓய்வு எடுக்கச் சொல்லிக் காலையிலும் மாலையிலும் வற்புறுத்துகிறார்கள்.

''அப்படியானால், நீங்களாகத்தான்...''

''ஆமாம், நான் வேலைக்குப் போய்க் கொண்டிருந்த சமயம் குடும்பத்தை என் அப்பா பார்த்துக் கொண்டார். சம்பளம் வாங்கி அவரிடம் கொடுப்பேன். வீட்டில் என்ன நடக்கிறது என எனக்குத் தெரியாது. பைசா தப்பாமல் கணக்கு எழுதி வைப்பார். நான் பார்க்க மறுத்தாலும் என் முன் வைப்பார். அந்தக் கடமையைத்தான் இப்போது செய்கிறேன்.''

''அதற்காக இத்தனை சுமையா?''

''சுமை இல்லை ராகவன்.. சுகம். ஏன் செய்ய வேண்டும் என நினைத்தால் சுமை. செய்தால் என்ன என்று அதையே எண்ணிப் பார்த்தால் சுகம். அவர்களை வேறுபடுத்திப் பார்த்தால் சுமை... நம் குடும்பத்துக் காகத்தானே செய்கிறோம் எனக் கருதினால் சுகம்.

துரைசாமி எழுந்து போனார்.

அவர் பேசியது வெகுநேரம் என் நெஞ்சில் நின்றது.

# பார்த்திபன் மகள்

## 8. உபதலைவன் திட்டம்

ஆபத்திலிருக்கும் மனித மனம் அதிவேகமாக இயங்குகிறது. ஆபத்திலிருந்து தப்ப சாதகமாக அருகில் ஏதேனும் கிடைத்தால் அதை ஆவலுடன் உடனே பற்றிக் கொள்ளவும் முற்படுகிறது. பிறந்த குலத்தின் காரணமாகவும், வளர்ந்த முறையின் காரணமாகவும் கூர்மையான அறிவைப் பெற்றிருந்த கார்குழலி வாயிலில் உபதலைவன் வந்து நிற்பதைக் கண்டதும் தன் உணர்ச்சிகள் ஏதும் முகத்தில் தெரியாதபடி அடக்கிக் கொண்டாள். அருகில் இருந்த மரப்பேழையில் தான் படிப்பதற்காக வைத்திருந்த ஓலைச் சுவடிகளில் ஒரு கற்றையை அப்படியே எடுத்துத் தன் கையிலிருந்த ஓலையையும் அதனுடன் சேர்த்துச் சாவதானமாகவே உள்ளே வைத்தவள் வெகு சாதாரணமாகத் திரும்பி உபதலைவனிடம், "என்ன உபதலைவரே ஏதேனும் விசேஷமுண்டா?" என்றும் வினவினாள்.

அவள் நடவடிக்கையிலிருந்து ஏதும் புரிந்து கொள்ள இயலாத உபதலைவன் முதலில் அவள் முகத்தில் தோன்றிய உணர்ச்சிகளைக் கவனித்திருந்தாலும், எப்போதும் இலக்கியங்களையும் நூல்களையும் அவள் ஆழ்ந்து படிப்பவள் என்று அறிந்திருந்ததனாலும், அவளை அந்த ஓலையைப் பற்றிக் கேட்பதில் பயனேதுமில்லையென்று உணர்ந்து கொண்டான்.

தான் வந்த வேலை அதைவிட முக்கியமானது என்பதால் அந்த ஓலையைப் பற்றிய கவலையை அத்துடன் விட்ட உபதலைவன் கார்குழலியை நோக்கி, "கொட்டுந்தளத்திற்கு நம் படைத்தலைவர் வருவதாகச் செய்தி வந்திருக்கிறது. அங்கு சோழ ஒற்றர் நடமாட்டம் காணப்படுகிறதாம்" என்றான்.

"அப்படியா?"

"ஆம். கோட்டைத் தலைவர் என்ற முறையில் நீங்கள் நாளை அவரைக் கண்டு வர வேண்டும்."

"சரி, சென்று வருகிறேன்" என்றாள், கொட்டுந்தளத்திற்குப் படைத் தலைவர் வரும் சமயங்களில் கோட்டைத் தலைவர் சென்று கண்டு வருவது வழக்கம் என்பதை அறிந்திருந்த கார்குழலி.

"நாளை தாங்கள் செல்வதற்குத் தந்தை யாரின் ரதத்தையே ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்றான் உபதலைவன்.

அவன் எண்ணம் எதுவாக இருந்த போதும் அவன் உடனடியாக அந்த இடத்தை விட்டு அகன்றால் போதுமானது என்று தீர்மானித்த கார்குழலி அவன் கூறிய வற்றுக்கெல்லாம் ஒப்புக் கொண்டாள்.

உபதலைவனோ தனது திட்டம் முதற்படியில் சரிவர நிறைவேறுவதைக் கண்ட மகிழ்ச்சியில் அங்கிருந்து அகன்றான்!

அவன் அகன்றதும் மீண்டும் அந்த ஓலையை எடுத்துக் கொண்டு கதவைத் தாழிட்ட கார்குழலி, அதை முழுதுமாகப் படித்து விட்டு உடனே எரித்தாள். அவள் தாய் மங்கையர்க்கரசி எழுதியிருந்த ஓலை அது. ஓலையைக் கொண்டு வருபவன் திருநாராயண பட்டரின் சீடன் அரையன் மதுராந்தகன் என்றும், அவளை மீட்டு வருவதற்காகவே அவன் வருகிறான் என்றும் அவன் திட்டங்களுக்கு ஒத்து

**விஷ்வக்சேனன்**

ழைக்குமாறும் எழுதியிருந்தாள்.

தாயின் எழுத்துக்கள் கார்குழலியின் கண்களையும் மனத்தையும் நிறைத்திருந்தன. தான் தாய் தந்தையற்ற அநாதையென்றும், ஆதாரவற்றவள் என்றும், அந்த உபதலைவனால் ஒருநாள் கொல்லப்படுவோம் என்றும் எண்ணி அன்று வரை நம்பிக்கையற்ற வாழ்வை நடத்திக் கொண்டிருந்த கார்குழலி திடீரெனத் தான் பாண்டிய இளவரசியென்பதையும் தன் தாய் உயிருடன் தனக்காகக் காத்திருப்பதையும் அறிந்து, உணர்ச்சிப் பிரவாகத்தில் தத்தளிப்பதைப் போல உணர்ந்தாள். இந்த உபதலைவனிடம் இருந்து மீண்டு அரையன் மதுராந்தகனுடன் தப்பித்தால்தான் தன் கனவும், உயிரும் பிழைக்கும் என்பதையும் உணர்ந்ததால் சிறையில் தள்ளப்பட்டவன் எப்படி மீண்டு வெளிவருவான்









- சீர்காழி வி. ரேவதி

என்று சிந்திக்கலானாள் அவள்.

அதே நேரத்தில் கோட்டையின் வேறொரு புறத்தில் கார்குழலியைத் தீர்த்துக் கட்டிவிட பெரும் திட்டமொன்றை வகுத்துக் கொண்டிருந்தான் உபதலைவன்.

ஆயுத சாலையின் பின்புறத்துப் பாறையொன்றில் அமர்ந்திருந்த அவன் எதிரில், கிங்கரர்களைப் போல நான்கு வீரர்கள் நின்றனர்.

''கவனமாகக் கேளுங்கள். நாளை தலைநகரிலிருந்து நம் படைத் தலைவர் கொட்டுந்தளத்திற்கு வருகிறார்.''

''எதற்காக?'' - நால்வரில் ஒருவன் கேட்டான்.

''கொட்டுந்தளத்தருகே சோழ ஒற்றர் நடமாட்டம் காணப்படுகிறதாம்!''

''உண்மையாகவா?''

பெரிதாக நகைத்த உபதலைவன், ''செய்தியைப் பரப்பி விட்டதே நான்தான்'' என்றான்.

நால்வரும் ஒன்றும் புரியாமல் விழித்தனர். ஒருவன் வினவினான் :

''அப்படியானால் நாளை படைத்தலைவர் வரப் போவது...?''

''அதுவும் வதந்திதான். ஆனால் படைத் தலைவர் வரும் போது இந்தக் கோட்டையின் தலைவர் அங்கு சென்று அவரைக் காண்பது வழக்கம்.''

நால்வரும் மௌனமாகக் கவனித்தனர்.

''நாளை இந்தக் காரணத்தைக் கூறி தலைவியை அனுப்பி வைக்கிறேன். காவலுக்கு நீங்களும் செல்ல வேண்டும்.''

''சென்று...?''

''அவள் கொட்டுந்தளம் வரை செல்லக் கூடாது. வழியிலேயே...'' என்று கையால் கழுத்தருகே நெறித்துக் காட்டினான் உபதலைவன். ''பிறகு அவளை ரதத்துடன் கீழே உருட்டி விடுங்கள். புரவிகள் மிரண்டு விபத்து நடந்ததாகக் கூறுவோம். நான்கு நாட்களுக்கு முகத்தைத் தொங்க விட்டுக் கொள்வோம். அவ்வளவுதான்'' - என்று முடித்தான் உபதலைவன்.

இருளில் அந்தப் பாறையின் கீழ் அது வரை பதுங்கியிருந்த வயோதிக உருவமொன்று அவர்கள் சென்றபின் சிறைச் சாலையை நோக்கி நகர்ந்தது.

சிறு வயதிலிருந்து வளைய வந்த அந்த மாளிகையையும் மலைச் சாரலையும் நிரந்தரமாகப் பிரியும் காலம் வந்து விட்டதைக் கார்குழலியின் உள்ளுணர்வு கூறியதால் பழகிய பணியாட்களையும், நடமாடிய அறைகளையும், தன்னை வளர்த்து ஆளாக்கிய கோட்டைத் தலைவனது அறையையும் சுற்றிச் சுற்றி வந்தவள் கண்களில் அந்தச் சிறிய தந்தப் பேழை பட்டது. அதை எடுத்துத் திறந்தாள். பட்டுத் துணியின் நடுவே ஒளி வீசியது சேரரின் முத்திரை மோதிரம். கோட்டைத் தலைவர் எப்போதாவது தலைநகருக்குச் செல்லும் போது மட்டும் அதை அணிந்து செல்வார் என்பது அவளுக்கு நினைவு வந்தது. வளர்ப்புத் தந்தையின் நினைவாக அதை மட்டும் எடுத்துக் கொள்ளத் தீர்மானித்தவள் தந்தப் பேழையுடன் தன் அறையை நோக்கி நடந்தாள். அங்கு அந்த முத்திரை மோதிரத்தைக் கையில் எடுத்து அணிந்து பார்த்தாள். அவள் விரலுக்குப் பெரிதாக இருந்ததால் அதை மீண்டும் பேழைக்குள்ளே வைத்து விளக்கொளியில் அதன் கற்கள் வீசிய வர்ண ஜாலங்களை ரசிக்கலானாள்.

அப்போது சாளரத்தின் வழியாக ஓசை எழாதபடி உள்ளே நுழைந்து நின்ற இன்னொரு உருவமும் அந்த மோதிரத்தைக் கண்டு பிரமித்தது.

அவள் அதை தந்தப் பேழையிலிட்டு மூடப் போகும் சமயத்தில், ''இளவரசி'' என்று அழைக்கவும் செய்தது அந்த உருவம்.

நள்ளிரவில், மூடியிருந்த அறைக்குள், தான் மட்டும் தனிமையிலிருப்பதாக எண்ணிக் கொண்டிருந்த கார்குழலி புதிதாக ஒரு குரல் பின்னாலிருந்து ஒலித்ததும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"மன்னிக்க வேண்டும் இளவரசி" என்ற அரையன், "அறிவித்து விட்டு வரும் நிலையில் நான் இல்லை" என்றும் கூறினான்.

படபடத்த இதயத்தை மெல்ல ஆசுவாசப்படுத்திக் கொண்ட கார்குழலி "நீங்கள்தானா?" எப்படி தப்பினீர்கள்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

அது அத்தனை முக்கியமில்லை என்பது போலத் தலையை அசைத்த அரையன், "இளவரசி, இந்த மோதிரம் உங்களுடையதா?" என்று வினவினான்.

"என் வளர்ப்புத் தந்தையின் மோதிரம் இது. தற்சமயம் என்னுடையது."

"இளவரசி, அதை என்னிடம் தருவீர்களா? உங்களை மீண்டும் காஞ்சியில் சந்திக்கும் போது திருப்பிக் கொடுத்து விடுகிறேன்" என்றான் அரையன்.

கார்குழலியின் விழிகளில் வியப்பு படர்ந்தது. "இது எதற்கு உங்களுக்கு?"

"இளவரசி, தங்களை இங்கிருந்து விடுவித்த பின்னர் நான் சேர நாட்டிற்குச் செல்ல வேண்டியிருக்கிறது. அங்கு எனக்கு இது பெரிதும் உதவும்" என்றான் அரையன்.

வளர்ப்புத் தந்தையின் நினைவாக அதை வைத்துக் கொள்ள கார்குழலி விரும்பிய போதிலும், தன்னை அங்கிருந்து மீட்டுத் தாயுடன் சேர்ப்பதற்காக உயிரைப் பணயம் வைத்து வந்திருக்கும் அரையனின் வேண்டுகோளைப் புறக்கணிக்கவும் மனம் வரவில்லை. சற்றுத் தயங்கிய பிறகு அந்த முத்திரை மோதிரத்தை அரையனிடம் நீட்டினாள்.

பெற்றுக் கொண்ட அரையன், "மிக்க நன்றி இளவரசி" என்றான்.

"சேர நாட்டில் என்ன பணி உங்களுக்கு?"

அரையன் சற்றுத் தயங்கிய பிறகு கூறினான். "சேர நாட்டில் புதிய கடற்படைத் தளம் ஒன்று அமைத்திருக்கிறார்கள். அது எங்கிருக்கிறது என்று கண்டறிவது முக்கிய பணி."

கார்குழலியின் விழிகளில் திடீரென ஓர் ஒளி பரவியது. "நான் அதை அறிவேன்" என்றாள். முதலில் இதைக் கேட்டு பிரமித்த அரையன், இந்தக் கோட்டை வெறும் ஆயுத சாலையாகத்தான் பயன்படுகிறதென்பதையும், இங்கிருந்துதான் காந்தளூர்ச் சாலைக்கும் ஆயுதங்கள் செல்கின்றன என்பதையும் அவள் முன்னமேயே கூறியிருந்ததால், ஆயுதங்களை அனுப்புவது தொடர்பாக அவள் இது பற்றி அறிந்திருக்க வாய்ப்பு இருக்கிறது என்பதை ஊகித்ததால், "இங்கிருந்துதான் அங்கு ஆயுதங்கள் செல்கின்றனவா?" என்று வினவினான்.

"ஆம். இங்கிருந்துதான் ஆயுதங்கள் செல்றன. அந்த இடத்தின் பெயர் விழிஞம். எனக்கு அதன் பெயர் மட்டுமே தெரியும்" என்றாள் கார்குழலி.

"நன்றி இளவரசி" என்று வணங்கிய அரையன், "நாளை உங்களைக் கொட்டுந்தளத்திற்குச் செல்ல வேண்டுமென்று உபதலைவன் கேட்டுக் கொண்டானா?" என்றான். 'இவருக்கு எப்படி தெரிந்தது?' என்று வியப்படைந்தாள் கார்குழலி.

"வியப்பதற்கு நேரமில்லை இளவரசி. அவன் ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்ளுங்கள்" என்றான் அரையன்.

"ஏன்?"

"அவன் கூறியபடி கொட்டுந்தளத்திற்குச் சேரர் படைத் தலைவர் யாரும் நாளை வருவதாக இல்லை!"

கார்குழலியின் முகத்தில் அதிர்ச்சி நிலவியது.

மகன் : என் கல்யாணத்திற்கு இப்ப என்னம்மா அவசரம்?

தாய் : உனக்கு அவசரம் இல்லாம இருக்கலாம். எனக்கு அவசரமா கிரைண்டர், மிக்சி, வாஷிங் மிஷின் எல்லாம் தேவைப்படுதே!

– கு. அருணாசலம்



"அப்படியானால்...?"

"உங்களை வழியிலேயே தீர்த்துக் கட்ட ஏற்பாடு செய்திருக்கிறான் உபதலைவன்."

கார்குழலி மென்று விழுங்கினாள்.

"அஞ்ச வேண்டாம் இளவரசி. அவன் திட்டத்தை நமக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொள்வோம்!"

"எப்படி?"

"அவன் கேட்டுக் கொண்டபடியே நீங்கள் ரதத்தில் கொட்டுந்தளம் நோக்கிச் செல்லுங்கள். ஆனால் வழியில் எனது வீரர்கள் நீங்கள் செல்லும் ரதத்தை வழிமறிப்பார்கள்."

அவன் சரியான முன்னேற்பாட்டுடன் தான் வந்திருக்கிறான் என்பதை அப்போது தான் புரிந்து கொண்டாள் கார்குழலி.

தன் அரைக் கச்சையிலிருந்து நறுக் கோலையொன்றை எடுத்தான் அரையன். "இளவரசி, இந்த ஓலையை உங்கள்

ரதத்தை மடக்குபவர்களிடம் காட்டுங்கள்'' என்றான்.

தனக்காக அவன் செய்துள்ள ஏற்பாடு களையும், மேற்கொண்டுள்ள அபாயங் களையும் எண்ணிய கார்குழலியின் மனம் நெகிழ்ந்தது.

''வீரரே,'' அழைத்த அவள் குரலில் கனி விருந்தது.

''என்ன இளவரசி?''

''ஒரு வேண்டுகோள்.''

''உத்தரவிடுங்கள் காத்திருக்கிறேன்.''

''நான் உங்களை விட வயதில் மிகக் குறைந்தவள். நான் பாண்டிய இளவரசி யென்பதே நீங்கள் கூறிய பிறகுதான் எனக்குத் தெரிந்தது. அதிகப்படியான மரி யாதை உங்கள் பேச்சில் தொனிக்கிறது. என்னைக் கார்குழலியென்று பெயரிட்டு அழைத்தாலே போதுமானது'' என்றாள்.

''கார்குழலி, நான் புறப்படுகிறேன். அனைத்து விவரங்களையும் காஞ்சி சென்ற தும் உங்கள் தாயிடமே நீங்கள் கேட்டு அறிந்து கொள்ளலாம். நான் உயிருடன் மீண்டு வந்தால் உங்களை மறுபடி சந்திக் கிறேன்'' என்று விடைபெற்றுக் கொண்ட அரையன், சாளரத்தின் வழியே இருளில் மறைந்தான்.

**நா**ன்காம் ஜாமத்தில் காவலர் மாறும் போது உள்ளே நுழைந்த காவலர்கள் அரை யன் இருந்த அறையின் கதவு விரியத் திறந் திருந்ததையும், வாசலில் நின்றிருந்த இரு காவலரும் மயங்கிக் கிடந்ததையும் கண்டு பதறினர். உள்ளே அறை காலியாகக் கிடந் தது. சாளரத்தின் கம்பிகளும் வளைக்கப்பட் டிருந்தன. சாளரத்தின் வழியாகச் செல்பவன் அதல பாதாளத்தில்தான் இறங்க வேண்டும் என்பதும், அப்படி சாளரத்தின் வழியாகத் தப்புபவன் சிறையின் கதவை எப்படித் திறந்தான் என்பதும், காவலர்கள் ஏன் மயங் கிக் கிடக்கின்றனர் என்பதும் புரியாத வீரர் கள் அடியோடு குழம்பிப் போனார்கள். தலைவருக்கு விவரத்தை அறிவிக்க ஓடவும் செய்தார்கள்.

செய்தியைக் கேட்ட உபதலைவன் சற்று திகைத்து நின்றாலும் கார்குழலியைக் கொட்டுந்தளத்திற்கு அனுப்பிய பிறகு வந்து காவலரை விசாரிப்பதாகக் கூறினான்.

அதற்குள் நன்றாக விடிந்து விட்டதால் கார்குழலி செல்வதற்கு ரதம் சித்தமாக இருந்தது. முன்தினம் உபதலைவனுடன் பேசிக் கொண்டிருந்த அந்த நால்வரும் பள பளத்த வாட்களுடன் புரவிகளில் காத்து நின்றனர். ரத சாரதியை நெருங்கிய உப தலைவன், ''சாரதி, கோட்டைத் தலைவி யைப் பாதுகாப்பாக அழைத்துச் சென்று வா'' என்றான். ஆனால் அவன் விழிகள் புரவியிலமர்ந்திருந்த நால்வரிடமும் சாரதி யைச் சுட்டிக்காட்டின. நால்வரும் புரிந்ததற் கறிகுறியாகத் தலையசைத்ததும் உபதலை வன் அரண்மனையை நோக்கி நடந்தான். கார்குழலியின் அறையை அடைந்தவன் பிர மித்து நின்றான்.

சர்வாலங்கார பூஷிதையாகக் காட்சி தந் தாள் கார்குழலி. எப்போதும் சேர நாட்டு வெண்பட்டை விரும்பி உடுத்திக் கொள்ப வள் இன்று சிவந்த பட்டாடை அணிந்திருந் தாள். அதுவரை பயன்படுத்தப்படாது பேழைகளில் உறங்கிய நகைகள் அனைத் தும் அவள் மேனியில் ஏறியிருந்தன. அகன்று விரிந்த கயல்விழிகளுக்கு அஞ்சன மும் தீட்டியிருந்தாள் அவள். அவள் நெற்றி யிலிட்டிருந்த திலகத்தையும் அவள் கரிய விழிகளில் விரிந்த பார்வையையும் கண்ட உபதலைவன் மனத்தில் அதுவரை அவன் அறிந்திராத அச்சம் தோன்றியது.

அப்படியே திறந்த வாய் மூடாது பின் னுக்கு நகர்ந்து வழி விட்ட உபதலைவனை லட்சியம் செய்யாது படிகளில் இறங்கினாள் கார்குழலி.

வாசலையடைந்து ரதத்தில் ஏறி அமர்ந் தவள், ஒருமுறை திரும்பி அந்த மாளிகை யை நோக்கினாள்.

படைத் தலைவரைக் காணச் செல்வ தால் இத்தனை படாடோபமாக அவள் செல் கிறாள் என்று முடிவு கட்டிய உபதலைவன், அவள் ஒருமுறை திரும்பி அந்த மாளி கையை ஆசைதீரப் பார்த்ததன் பொருள் புரி யாமல் விழித்தான்.

''சாரதி, ரதத்தைச் செலுத்து'' என்று உத்தரவிட்டாள் கார்குழலி.

அடுத்த வினாடி அந்த ரதம் அதிவேக மாகக் கோட்டை வாயிலைக் கடந்து பறந் தது.

''அணையப் போகும் விளக்கு பிரகா சிக்கிறது'' என்று உபதலைவன் உதடுகள் முணுமுணுத்தன.

(தொடரும்)

இவர் : என்ன, எப்படி இருக்கீங்க?

டாக்டர் : ஹி... ஹி... ஃபீல் ஃபுல்லா இருக்கேன்!

- எல். ரமேஷ்



# பரிசு ரூ. 250!

## கலபமாக்கப்பட்ட சொல் விளையாட்டு

எங்களுக்கே தெரியும்; சென்ற வாரம் சொல் விளையாட்டு கொஞ்சம் கஷ்டம்தான். அதை எளிமையாக்கியதுடன் விளக்கங்கள் (க்ளூ) தவிர கட்டங்களிலும் சில எழுத்துக்களைத் தந்து விட்டோம் - மேலும் சுலபமாக்க. அதனால் குலுக்கலில் முடிகிறதா, பரிசுப் பணம் பகிர்வதானா - பார்க்கலாம் உங்கள் திறமையை!

ஒருவருக்கு மேல் சரியான விடைகளை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். பத்து பேருக்கு மேல் சரியான விடை எனில் பத்து பேர் குலுக்கல் முறையில் தேர்வு. ஆசிரியர் தீர்ப்பு முடிவானது.

அடித்தல் திருத்தல் இன்றி கட்டங்களைப் பூர்த்தி செய்து விலாசம் எழுதி இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பக் கடைசித் தேதி *17.3.93.*

உறை மீது "சொல் விளையாட்டு - 4" என்று அவசியம் குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

### இடமிருந்து வலம் :

1. கடவுளின் ___ ___ ___ ___ ___ ___ மகான்களை வணங்குகிறார்கள்.
4. மோசமான சினிமா பார்த்த வெறுப்பில் இப்படி விமர்சிக்கலாம்.
7. இரவில் வரும் திருடர்கள் அல்ல.
8. விவேகானந்தரிடம் இருந்ததும் அல்லவும் இணைந்தால்...
9. பொன்னை இப்படி வார்க்கலாம்
10. ஓட்டை ___ ___ ___ ___ ___ ___ ___ ___ ரெண்டு மீனாவது சிக்கும்!
12. சிவனடியாராக ___ ___ ___ ___ ___ ___ ___ ___ ___ ___ ___ நரசிம்ம பல்லவன்.
17. முருகன் சிரிப்புக்கு மறு வடிவச் சொற்கள்.
19. குரங்கே!
20. ரேஷன் கடையில் சரியான ___ ___ ___ ___ ___ ___ சொல்வார்கள்; ஆனால்....
21. இந்த இடத்தில் கத்தியைச் சாணை பிடிக்கலாம்; காலையும் இடித்துக் கொள்ளலாம்.
22. உயிர் பறிப்பவன்தான்!
23. ___ ___ ___ ___ ___ ___ வானிலை ஸாட்டிலைட் கூறும்.

### மேலிருந்து கீழ் :

1. கவி நயத்துடன் கூடிய ஆடம்பரமான வரவேற்புச் சொல்
2. சிறந்த யோசனைகளை நாங்கள் ___ ___ ___ ___ ___ ___ ___
3. கிறிஸ்துமஸை இப்படி அழைக்கலாம்
4. கத்தரிக்காய் மலிவு என்பதால் திரும்பத் திரும்ப ___ ___ ___ ___ ___ ?
5. குரங்காகப் பிறந்தால் ___ ___ ___ ___ ___ ___ ___ வேண்டும்.
6. இனிப்பு அலுத்துப் போனால் இதைக் கேட்போம்.
11. இத்தகைய 'சிவில் கோட்' வேண்டும் என்றுதான் கேட்கிறார்கள்.
13. நாளக் கருவியை ஒற்று நீக்கி, காது கொடுத்துக் கேட்க முடியாதவன்.
14. ஒரு மகாபாரத பாத்திரத்தின் முன்னிலையில்...
15. ஒரு நட்சத்திரத்தின் கரத்தினால்
16. தலைமைக்குத் ___ ___ ___ ___ ___ ___ உழைக்க வேண்டும்.
18. புராதனமாகச் 'சொன்னான்'.



என் பெயர் : ..............................................................

விலாசம் : ..............................................................

## விமர்சனம்

# தத்துக் கொடுக்கப்பட்ட மெட்ரோ நேரம்!

●● டி.வி.யை எப்போது 'ஆன்' பண்ணினாலும் இரைச்சலின் இடையே 'ச்சார் ரன்' அல்லது 'ஔஸாட்'! அளவு மீறின உற்சாகத்தில் மைதானத்தில் சாத்துக்குடி தோல், காகிதக் குப்பை எறியும் பம்பாய் ரசிகர்கள் அல்லது வெறியர்கள்! ஒரு கட்டத்தில் இது கிரிக்கெட் கிரௌண்டா, கார்ப்பரேஷன் குப்பை லாரியா என்ற சந்தேகம் வந்து விட்டது! மாறுதலுக்காக, ஹைதராபாத் டீவியில் திங்கள் மாலை, ரயில்வே - கர்நாடகா அணிகளுக்கிடையேயான பெண்கள் கிரிக்கெட். பிரமிளா என்பவர், குதித்து குதித்து ஸ்பின் போடுகிறார். சரி, செஞ்சுரி போட்டு விட்டு, 'ஈக்கள்' நிறைந்த அரங்கை நோக்கி 'பாட்'டை உயர்த்தி மகிழ்கிறார்.

●● சுகிசிவம் ஒரு வித்தியாசமான பிரசங்கர். அவருக்கு ஜனங்களின் நாடி புரிந்திருக்கிறது. எதை எப்படிச் சொன்னால் ரசிக்கும் என்ற பிரம்ம வித்தை அவருக்கு அத்துப்படி ஆகியிருக்கிறது. கடந்த செவ்வாய், முதல் சேனலில் ஒலிபரப்பான அவரது அபிராமி அந்தாதி பற்றின உரை இதற்கு சாட்சி. குழாயைத் திருகினால் தண்ணீர் கொட்டுவது போல (கார்ப்பரேஷன் குழாயைச் சொல்லவில்லை) ஓயாத, நகைச்சுவை கலந்த கருத்து மழை. அரைமணியில் முடிந்து விட்டது வருத்தம்.

●● ஒரு பெண். இரண்டு கையும், இரண்டு காலும் கிடையாது. அம்மணி, இரண்டு கம்ப்யூட்டர்களை வைத்துக் கொண்டு பிஸினெஸ் நடத்துகிறார்! தானே கீ-போர்டின் முன்னே உட்கார்ந்து ஆப்பரேட் பண்ணுகிறார். எப்படி? வாயில் ஒரு நீள ஸ்டிக். தடங்கலின்றிப் பணி. தன்னம்பிக்கை! 'ஸ்டார்+'ல் மேற்படி நிகழ்ச்சி.

●● இரண்டாவது சேனல் Metro Hour 'ல் வெள்ளி தோறும் 'House Full' என்றொரு நிகழ்ச்சி. ஹிந்தி திரையர்களின் மலரும் நினைவு, தற்போதைய வெற்றிப் படங்கள் குறித்த on the spot வாசகர் கணிப்பு இத்யாதி. Metro Hour ஐ, ஹிந்தி மற்றும் இங்கிலீஷ்காரர்களுக்கே தத்துக் கொடுத்து விட்டார்கள் போலிருக்கிறது.

●● நீண்ட முயற்சிக்குப் பின், அமெரிக்கா எய்ட்ஸுக்கு மருந்து கண்டு பிடித்திருப்பதை பிபிஸியில் செய்திப் படமாகக் காட்டினார்கள். டாக்டர்களின் முகங்கள். எதிர்பார்ப்புடன் எயிட்ஸ் நோயாளிகள். மேற்படி மருந்து, வந்தபின் குணப்படுத்துவதற்கே என்றும், வரு முன் தவிர்க் கும் முயற்சி தொடர்வதாகவும் சொன் னார்கள். வருமுன் தவிர்ப்பது இப்போதைக்கு நல்லொழுக்கம் மட்டுமே.



✱ இப்போ புஷ்டி!



✱ நாடி புரிந்தவர்

●● ரொம்ப நாள் கழித்து world this week ல் சல்மான் ருஷ்டி. இப்போது அவர் கொஞ்சம் புஷ்டி. பிரிட்டிஷ் பாதுகாப்பில் நன்றாகவே இருக்கிறார். ஆனாலும் கண்ணில் மாறாத மரண பயம். கோமேனி போனாலென்ன? இன்னொருத்தர். சாத்தான் சாபம் அண்ணன் ருஷ்டியை லேசில் விடுவதாக இல்லை!

– கிச்சா

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
சந்திரா சுப்பிரமணியன்,
44, கனகவேல் காலனி,
ராஜா மில் ரோடு,
மதுரை - 625 001.

● எம். பிரபு, குமராட்சி.

*? இறைமடிக்கும் பிரமுகர்கள் போட்டி ரொம்பக் கடினம்தான். பிரமுகரையும் கண்டுபிடித்துக் காட்டுனிஸ்டையும் கண்டு பிடிக்க வேண்டும் - எங்களால் முடியுமா?*

! பட விளையாட்டு 1, 2-ல் பலரும் அடைந் திருக்கும் வெற்றியைப் பார்க்க, இதையும் வாசகர்கள், ஊதித் தள்ளி விடுவார்கள் என்றுதான் தோன்றுகிறது. பார்ப்போம்!

● எல். மாறன், மேல்பட்டி.

*? திரைத் துறையில் கறுப்புப் பணத்துக்கும் - வரி ஏய்ப்புக் கூட்டத்துக்கும் இடையே நடந்த மோதல்களுக்குத் தராசு வக்காலத்து வாங்கியது ஏன்?*

! கறுப்புப் பணத்துக்கும் வரி ஏய்ப்புக்குமா வக்காலத்து வாங்கினேன்? இல்லையே! ஒரு நடிகர் தமக்கு ரசிகர்களிடம் இருக்கும் செல்வாக்குக்கு ஏற்ப 'ரேட்' கேட்பது என்பது, உலக முழுவதும் ஒப்புக் கொள்ளப் படுகிற விஷயம்! 'பாபுலாரிட்டி' இல்லை யெனில் இவர்கள் கேட்கும் 'ரேட்' கிடைக் காது. கறுப்புப் பணம் - வரி ஏய்ப்பு என்பது வேறு பிரச்னை. அதை உங்களைப் போலவே நானும் வன்மையாகக் கண்டிக் கிறேன். ஆனால் கண்டிப்பதாலும் 'ரெய்ட்' நடத்துவதாலும் கறுப்புப் பணம் - வரி ஏய்ப்பு குறையாது. அரசின் கொள்கைகள் மாறினால்தான் குறையும்.

● மல்லிகை மன்னன், மதுரை.

*? "எம். எஸ். விசுவநாதனுக்குப் பிறகு சினிமா சங்கீதம் அஸ்தமனமாகி விட்டது" என்கிறாரே சங்கீத விமர்சகர் சுப்புடு?*

! அப்படியா! சுப்புடுவுக்கு இளையராஜா மீது என்ன கோபமோ, தெரியலையே!

● பி. ராஜன், தாராபுரம்.

*? இ. காங்கிரஸ் - அ.தி.மு.க. சண்டையைக் "குடும்பச் சண்டை" என்று தங்கபாலு கூறி யுள்ளாரே?*

! குடும்பச் சண்டை என்பதால் அது வரவேற் கத்தக்கதாகி விடுமா என்ன? குடும்பச் சண்டையும் - அதுவும் இதுபோன்ற அசிங்க மான சண்டை - அருவருக்கத்தக்கதுதான். ஒன்றுபட்டு ஒற்றுமையாக வாழும் குடும் பத்தைத்தான் நாம் மதிப்போமேயொழிய, குடுமிப்பிடி சண்டையில் இறங்கும் குடும் பம் நமது வெறுப்பைத்தான் சம்பாதித்துக் கொள்ளும்.

● எம். நாகேந்திரகுமார், ஓசூர்.

*? அ.தி.மு.க. அமைச்சர்களை "டெலிவரி பாய்ஸ்" என்று வாழப்பாடி கிண்டல் செய் திருப்பது பற்றி?*

! அரங்கநாயகம் இவரை "எர்ரண்ட் பாய்" என்கிறார். இவர் அவரை "டெலிவரி பாய்" என்கிறார். எப்படியோ இன்னும் "பாய்-பாய்" ஆகத்தான் இருந்து வருவதாகத் திருப்தி அடைகிறார்களோ, என்னமோ!

● கி. மணி, பெங்களூர்.

*? 'கிருஷ்ண நீதி' பற்றி தராசு அளித்துள்ள பதிலில் 'முடிவைப் போலவே மார்க்கமும் முக்கியமானது' என்ற காந்திஜியின் கோட் பாடு வற்புறுத்தப்பட்டுள்ளது. அப்படியா னால் காங்கிரஸை வீழ்த்தும் ஒரே நோக்கில் ராஜாஜி தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்தது நியாயம்தானா?*

! அதற்காகப் பின்னாட்களில் ராஜாஜியே வருத்தப்பட்டதுண்டு என்பது ஒருபுற மிருக்க, அவர் பெருநம்பிக்கை வைத்திருந்த அண்ணாதுரை அகால மரணமடைவார் என்று அவர் எப்படி எதிர்பார்த்திருக்க முடி யும்? யாருமே எதிர்பாராத பின்னடைவு அது. இதுபோன்ற சந்தர்ப்பங்களில்தான் 'விதி' என்ற சொல் அர்த்தமுடையதாகிறது.

● சந்திரா சுப்பிரமணியன், மதுரை. ❒

*? ருக்மிணி லக்ஷ்மிபதியின் நூற்றாண்டு விழா கொண்டாடப்படும் நேரத்தில் அவரைப் பற்றிச் சில வார்த்தைகள்?*

# ஹிந்தி பிரசார் சபையில் குண்டு வெடித்தது பற்றி?



★ என்ன கோபமோ?

! ''முதன் முதலாகச் சிறை சென்ற பெண் சத்தியாகிரகி'' என்று பெயர் பெற்றிருந்த ருக்மிணி லக்ஷ்மிபதி, 1942 ஆகஸ்டு போராட்டத்தின் போது மிகப் பிரபலமடைந்தார். அந்த, ''வெள்ளையனே வெளியேறு'' போராட்டத்தின் போது தலைவர்கள் எல்லாரும் கைதாக, தமிழக காங்கிரஸைக் கட்டிக் காக்கும் பொறுப்பு ருக்மிணிக்கு ஏற்பட்டது. திறம்பட நிர்வகித்தார். அப்போதும் அரசைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார். ஆனால் ஏனோ அரசு இம்முறை இவரை எச்சரித்ததே தவிர, சிறைப்படுத்தவில்லை. டாக்டராகிய இவர் கணவரும் தேசியவாதியாக விளங்கியது இவருக்குப் பெரும் ஊக்கம் அளிப்பதாய் இருந்தது. அயல்நாடுகள் சென்று, உலகப் பெண்கள் மாநாடுகளிலெல்லாம் இந்திய விடுதலைக்கு ஆதரவு தேடினார். வேதாரண்யம் உப்பு சத்தியாகிரஹத்தின் போது தம் கணவர்வசம் மூன்று வயது மகனை ஒப்படைத்து விட்டுச் சென்றார். ஓராண்டுச் சிறை தண்டனை பெற்றார். 1937 ராஜாஜி அமைச்சரவையில் துணை சபாநாயகர் பதவி பெற்றார். 46ல் பிரகாசம் அமைச்சரவையில் சுகாதார அமைச்சர். பெண்கள் பல்வேறு துறைகளில் சாதனைகள் புரிவது இன்று சகஜமாகி விட்டது. ஆனால் முன்னோடிகளுக்கு என்றுமே தனி மதிப்பு உண்டு.

● கி.ராமதாஸ், சென்னை - 25.

**? தி. நகரிலுள்ள ஹிந்தி பிரசார சபை குண்டு வெடிப்புக்கு இலக்கானது பற்றி?**

! தினசரி நடக்கும் வழிப்பறிகளும் - வீடு புகுந்து கொள்ளையும், வாரம் ஒருமுறையேனும் நடக்கும் குண்டு வெடிப்புச் சம்பவங்களும் தமிழகம் அமைதிப் பூங்காவாக 'ஜெ' ஆட்சியில் திகழ்வதைத்தான் நமக்குச் சதா நினைவூட்டிக் கொண்டிருக்கின்றன!

● ஆர். இருதயராஜ், திருபுவனம்.

**? ஜெயலலிதா பிறந்த நாளை முன்னிட்டு கைதிகள் தண்டனைக் காலத்தைக் குறைத்திருப்பது ஆரோக்கியமானதா?**

! 'இல்லை' என்று ஏற்கெனவே நாம் சொல்லப் போகத்தான், கே.ஏ.கே. நம்முடன் மல்லுக்கு நின்றார். விடுதலையானவர்களில் சிலர் கொலை, கொள்ளை எல்லாம் நிகழ்த்தினர். இப்போது மறுபடியும் கைதிகளுக்கு விடுதலையாம். குற்றம் புரிந்து விட்டு வெளியே பகிரங்கமாகத் திரியும் சிலரைப் பார்க்கக் கைதிகள் விடுதலை அப்படியொன்றும் மோசமில்லை என்று 'ஜெ' அரசு எண்ணுகிறதோ, என்னமோ!

● அ. சுகுமாரன், காட்டுக்காளூர்.

**? இந்த ஆண்டின் இனிப்பான அதிர்ச்சி?**

! வேறென்ன; கடைசி, இன்னிங்ஸ் வெற்றி உள்பட, மூன்று டெஸ்ட்களிலும் இந்தியா வென்றதுதான்; இங்கிலாந்து தோற்றதுதான்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? நாகாலாந்து, மேகாலயா தேர்தல் முடிவுகளைப் பார்க்கும் போது காங்கிரஸ் கட்சிக்கு இன்னும் கொஞ்சம் உயிர் இருக்கும் போல் தெரிகிறதே?**

! அகில இந்திய ரீதியில் வேறு சிறந்த எதிர்க்கட்சி இல்லாததே காங்கிரஸின் பெரிய பலம். அந்த பலத்தை நன்கு பிரயோகிக்க முடியாமல் தடுப்பது உட்கட்சிப் பூசல். எப்படியோ மத்தியிலும் காங்கிரஸ் ஆட்சி, பட்ஜெட் தொடர் முடியும் வரை நீடித்தால் நிம்மதிப் பெருமூச்சு விடலாம். அப்புறமும் உயிர் போய்ப் போய்த் திரும்பினாலும் இடைத் தேர்தலைத் தவிர்த்து விட்டால் நல்லது.

● ஆர். உமா, திருச்சி.

**? 'ஜெ' பிறந்த நாளுக்கு விசேஷமா ஏதாவது இருக்கா லார்?**

! பால் குடங்கள் இருக்கு; பக்கம் பக்கமாக விளம்பரம் இருக்கு; கைதிகள் விடுதலை இருக்கு; கைத்தறி துணி தள்ளுபடி இருக்கு; செவிப் பறை கிழிய சிவி மாப் பாட்டிருக்கு; மூளைச் சலவை பண்ணும் பாராட்டுப் பேச்சுக்கள் இருக்கு. இல்லாதது அடக்கம் மட்டுமே!



* ''குடும்பச் சண்டை''



* நூற்றாண்டு விழா



* ''டெலிவரி பாய்''



* பிறந்த நாள் விசேஷம்



* ''[illegible]''

# காத்திருந்த கடனுதவி கை நழுவிப் போச்சு! வாங்க விரும்பிய டூ - வீலருக்கு வழி காண்பது எப்படி?

வேலை கிடைத்த போது செல்வி வேதவதிக்கு மனம் நிறைய மகிழ்ச்சி. உற்சாகம். ஆர்வத்துடன் அலுவலகம் சென்று வந்தார். என்றாலும், மாதப் போக்கில் அவருள் லேசசான மாற்றம். பஸ் நெரிசலின் பயமுறுத்தல். அதன் பலனாக அலுப்பு. டூ – வீலர் வாங்கினால் வசதியாக இருக்கும். அலுவலகத்தில் கடனுதவி கேட்டார். காத்திருந்தார். கடைசியில் அது கைநழுவிப் போயிற்று. புரட்ட வேறு வழி? யோசித்த போது நினைவில் ஒரு மின்னல்.

ஏற்னெவே சேர்ந்திருந்த ஸ்ரீரா சீட்டை இப்போது பயன்படுத்தி கொள்ளலாமே!

வெளி ஆதரவையோ, உதவியை யே நாடவேண்டிய அவசியமின்றித் தங்க பணத்தைக் கொண்டே தங்கள் தேவைகளை பூர்த்தி செய்து கொள்ளும் கௌரவமா பாதை ஸ்ரீராம் சீட்டு.

*ஸ்ரீராம் சிட்ஸ்–மேலும் பலருக்கும் பல வகையிலும் பலன்.*

ஸ்ரீராம் சித்திரை சீட்டு விழா!
5 முதல் 14 வரை
ஏப்ரல் '93.




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**
நிர்வாக அலுவலகம்: 'சுப்பிரமணியம் பில்டிங்'.
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002.
போன்: 474451/475536/470400/473932.



உடனடியாகத் தேவைப்படும் நிதியைப் பெற்று அதனைச் சுலபமான மாதத் தவணைகளில் திருப்பிச் செலுத்துவதற்கு இணையற்ற சாதனம் ஸ்ரீராம். இன்றைய தேவைகளைப் பூர்த்தி செய்ய. நாளைய சேமிப்பு... இரண்டுக்கும்.

கூட்டு முயற்சியாக ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளும் நமது பாரம்பரியத்துக்கு இணக்கமான நிறுவன அமைப்பு சிட்ஃபண்ட். இந்த உண்மை யைப் புகழ் வாய்ந்த ஏசியன் டெவலப்மெண்ட் பேங்க் நடத்தியுள்ள ஓர் ஆய்வும் கண்டுணர்ந்து தெரிவிக்கிறது.

பரவலாகக் கிளைகளும் எண்ணற்ற சர்வீஸ் சென்டர்களுமாக விரிவடைந்து ஒரு மகத்தான மக்கள் இயக்கமாக வளர்ச்சியடைந்துள்ள ஸ்ரீராம் சிட்ஸின் துணை கொண்டு 5,70,000 உறுப்பினர்கள் பலனடைந்து வருகிறார்கள்.

அதேபோல் நீங்களும் அடைய இதோ ஒரு அரிய வாய்ப்பு-ஸ்ரீராம் சித்திரை சீட்டு விழா!



# பாப்கார்ன் கனவுகள் 20

ரேடியோவில் பாடல் சப்தமாய் ஒலிக்கிறது. உள்ளறையில் லக்ஷ்மிநாராயணனும், அவனுடைய நான்கு வயது மகனும் பாடலுக்கேற்ப நடனம் பழகிய உற்சாக வியர்வையில் ஜன்னல் வெயில் பட்டு மின்னுகிறது. வாசலில் கீரைக்காரி சில்லறைக்குக் காத்திருக்கிறாள். கொல்லைப்புறத்தில் கொட்டாங்கச்சி அரப்புப் பொடி கேட்டு நிற்கிறது. மேடை அடுப்பில் குக்கர் கத்துகிறது. காலை அவசரத்தில் ஆயிரம் வேலைகள். மனத்தில் கிரமம் மாறாமல் ஒவ்வொன்றையும் நினைவு வைத்து, நீட்டிய வயிற்றில் விஜயலக்ஷ்மி அறைக்குள் வேகமாய் சில்லறை எடுக்க நுழைகிறாள்.

''கொஞ்சம் நகருங்கோ.''

லக்ஷ்மிநாராயணன் ஆடிக் கொண்டே நகர்கிறான். விஜயலக்ஷ்மி பீரோவில் காசு தேடுகிறாள். அவசரத்துக்கு ரெண்டு ரூபாய் சில்லறையாக இல்லை. நடனத்தில் நகர்ந்து சட்டைப் பையில் பணம் எடுத்து லக்ஷ்மிநாராயணன் பையனிடம் கொடுக்க, அவனும் அவ்விதமே நகர்ந்து பணத்தைத் தாயாரிடம் கொடுக்கிறான். விஜயலக்ஷ்மி வாசலுக்கு வரும் போது தெருக் கதவில் கார் வந்து நிற்கிறது. எதிர் வீட்டு வாசலில் விவரமறிய ஆவலுடன் மாமனார் நிற்கிறார்.

கதவு திறந்து வெள்ளைச் செருப்பு இறங்குகிறது. நீட்டிய கையகலச் சீட்டில் லக்ஷ்மிநாராயணன் பெயர் எழுதியிருக்கிறது.

''இருக்காரு.''

வரவேற்பறையில் புதிய குரல் நுழைந்ததை உணர்ந்து அசடு வழிய ஆட்டத்தை நிறுத்தி அவசரத்தில் லக்ஷ்மிநாராயணன் வருகிறான். உடலின் படபடப்பு தவறும் நடையில் தெரிகிறது. தெருக் கதவில் கார் மின்னுகிறது. வரவிருக்கும் நற்செய்திக்கு வெள்ளைச் செருப்பு கட்டியம் சொல்லுகிறது. கூடையைத் தூக்கி விட ஆளில்லாமல் கீரைக்காரி நிற்கிறாள். ஏதோ காரியம் போல் மாமனாரும் வந்து விடுகிறார். லக்ஷ்மிநாராயணன் மடியில் பையன் வந்து அமர்ந்து கொள்கிறான். கதவுக்குப் பின்னால் விரலில் விஜயலக்ஷ்மி கோலமிடுகிறாள்.

''யாரு சார்?''

''ஜெகபதி ஃபிலிம்ஸ்லேர்ந்து வர்றோம். டைரக்டர் சார் போட்டோ பார்த்தாரு. ஆபிஸ்ல அட்ரஸ் கொடுத்தாங்க. நேரிலே உடனே அழைச்சிட்டு வரச் சொன்னாங்க. அஞ்சு, பத்து நிமிஷம் வெயிட் பண்றோம். அவசரமில்லே. நிதானமா சட்டையை மாட்டிக்கிட்டுப் புறப்படுங்க.''

உள்ளறையில் மகிழ்ச்சியில் லக்ஷ்மிநாராயணன், விஜயலக்ஷ்மியைத் தூக்கி, பத்திரமாய்ச் சுற்றி இறக்கி விடுகிறான். பேரனுடன் நுழைந்த மாமனார் முகம் சிவந்து விடுகிறது. இதுவரை போடாத புதுச் சட்டையில் குண்டூசி எடுக்கப்படுகிறது. ஆளுயரக் கண்ணாடி முன் ஜில்பாஸ் அலங்காரங்கள்.

''பவுடர் தெரியறதா?''

விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே கன்னத்தில் துடைத்து விடுகிறாள். செம்மண் மேடு ஏறி இறங்கி கார் மறைகிறது.

தி. நகரில் புதியதாய் வாடகைக்கு எடுத்த பங்களா. தரை பூராவும் மெத்தை விரித்துக் கதை விவாதம் நடக்கிறது. திண்டு ஒன்றில் சாய்ந்து கொண்டு டைரக்டர் டெலிபோன் பேசுகிறார். பேச்சினிடையே அவரது கண்கள் அறைக்குள் நுழைந்த லக்ஷ்மிநாராயணனை அளவெடுக்கின்றன. முகத்தில் திருப்தி ஒரு படலம் கூடியவராய்ச் சமிக்ஞை செய்து அமரச் சொல்கிறார். மெத்தையின் நுனியில் லக்ஷ்மிநாராயணன் சங்கடமாய் உட்கார்ந்து கொள்கிறான். ரெவின்யூ ஸ்டாம்ப் நாக்கில் வைத்து புரொடக்ஷன் மேனேஜர் கையில் பெட்டியுடன் வருகிறார். அங்கேயே அக்ரிமெண்டில் நீட்டிய இடங்களில் கையெழுத்துப் போட்டு முன்னூறு ரூபாய் அட்வான்ஸ் கிடைக்கிறது. டெலிபோனை வைத்து விட்டு டைரக்டர் திரும்புகிறார். நாளை வெளியூர் புறப்பட்டு, தொடர்ந்து இருபது நாட்கள் அவுட்டோர்

ஷூட்டிங். எல்லா நாட்களும் அவன் இருக்க வேண்டும். கதைப்படி நல்ல முக்கியமான ரோல். துபாயில் இருக்கிற கதாநாயகியின் மூத்த அண்ணன். இங்கே குடும்பச் செலவுக்கு அவன்தான் பணம் அனுப்புகிறான். வில்லன் குரூப் வீட்டிற் குள்ளேயே இருக்கிறது. கதாநாயகன் பண் ணையார் மகன். துபாய் அண்ணனின் நண்ப னும் கூட. நல்ல கதை. தெலுங்கில் சூப்பர் ஹிட். லோ, ஆல் தி பெஸ்ட். உனக்கும் நல்ல ரோல். கிட்டத்தட்ட பாசமலர் கணே சன் மாதிரி.''

டைரக்டர் கண்ணடித்துச் சிரிக்கிறார். கடவுளே, எத்தனை பெரிய வார்த்தை? உணர்ச்சிப் பெருக்கில் லக்ஷ்மிநாராயணன் அவர் கால்களில் விழுந்து எழுகிறான். விஷயம் தெரிந்தால் விஜயலக்ஷ்மி எவ்வ ளவு சந்தோஷப்படுவாள்? முந்திரிப் பருப்பு அல்வா ராசியில்லை. பாதாம் அல்வா அரை கிலோ. அட்வான்ஸில் ஆட்டோ பிடித்து வில்லிவாக்கம் வருகிறது. அடுத்த நாள் அவுட்டோர் ஏற்பாடுகளில் தொகுதியே பரபரப்பாகிறது. லக்ஷ்மிநாராயணன். விஜயலக்ஷ்மி யைப் பிரிந்து இருபது நாட்கள் அவன் எப்படி இருக்கப் போகி றான்? வழக்கம் போல் அசந்தர்ப்ப மாய் மாமனார் வந்து நிற்கிறார்.

## ம.வே.சிவகுமார்

சமையலறையில் விஜயலக்ஷ்மி அவருக்கு மேற்கொண்டு நடந்த விவரங்களைச் சொல் லுகிறாள்.

''மாப்பிள்ளை துபாய் போறாரா?''

வேறு அறையில் லக்ஷ்மிநாராயணன் பல்லைக் கடித்துக் கொள்கிறான். அவன் காதில் விழுந்தால் விழட்டுமே என்று ஆபீஸ், சம்பளம், லீவ் தொடர்பான ஏடா கூடமான கேள்விகளை மாமனார் வீசு கிறார். அத்தனை கேள்விகளுக்கும் விஜய லக்ஷ்மி புன்னகை ஒன்றையே பதிலாகவைத் திருக்கிறாள். இனியும் பொறுப்பதில்லை யெனத் தமிழன் புறப்படுகிறான். சமைய லறை வாசலில் நின்று விரல் சொடுக்கித் திரும்பச் செய்கிறான். அவனைப் பற்றிய அநாவசியக் கவலை கள் யாருக்கும் வேண் டாம். இந்த ஒரு படம். அதில் அவன் யாரென்று காட்டி விடுவான். என்ன? சவால்தானா? புடைத்த நரம்பில் கொக்கரித்து சைக்கி ளில் லக்ஷ்மிநாரா யணன் காய்கறி வாங் கப் புறப்பட்டுப் போகிறான்.

''வந்தா சந்தோ ஷம்தான்.... வர ணுமே?''

சொல்வதைச் சொல்லி விட்டு மாம னார் புறப்படுகிறார்.

கொல்லைப் புறத்தில் துவைத்துப் போட்ட லக்ஷ்மிநாரா யணன் உடைகள் உலர்ந்து மொட மொடக்கின்றன. வண்ணக் களஞ்சிய லுங்கியில் மொத்தம் பதினேழு துணிகள். லாண்டரியைத் தேடிப் போகின்றன. மார்க்கெட்டிலிருந்து லக்ஷ்மிநாராய ணன் வெறும் கை யில், விசிலடித்து தெருக் கதவில் சைக் கிள் மோதுகிறான்.

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication : Madras
2. Periodicity of Publication : Weekly
3. Name of Printer : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras - 600 040
4. Name of Publisher : V. Vaidyanathan
   Nationality : Indian
   Address : 6-A, Warren Road, Mylapore, Madras - 600 004
5. Name of Editor : Seetha Ravi
   Nationality : Indian
   Address : 15, Fourth Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Madras - 600 041

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Vaidyanathan
Publisher

1.3.1993

''காய்கறி வாங்கல்லே?''

விஜயலக்ஷ்மி ஆச்சர்யமாய்க் கேட்கிறாள். லக்ஷ்மிநாராயணன் கட்டை விரலைப் பின்னால் காட்டுகிறான். மோட்டார் ரிக்ஷா ஒன்று வட்டமடித்து வீட்டின் முன் நிற்கிறது. கூடைகளில் காய்கறி நடுவே கூடுதலாய் ஒரு முட்டைக் கோஸ் போல லக்ஷ்மி நாராயணன் பையன் உட்கார்த்தி வைக்கப்பட்டிருக்கிறான்.

''எதுக்கு இவ்வளவு கறிகாய்?''

''தமிழன் பொறுப்பில்லாம இருபது நாள் அவுட்டோர் போயிட்டான். நான்தான் என் பொண்ணை பத்திரமா பார்த்துக்கிட்டேன்னு ங்கொப்பன் அண்டை நாட்டு மன்னர் அநாவசியமா சொல்லக் கூடாது பார். அதுக்குத்தான்.''

அலாரம் அதிகாலையில் அடிக்கிறது. ஈரத் தலையில் வந்து லக்ஷ்மிநாராயணன் நிறுத்துகிறான். இன்னும் சிறிது நேரத்தில் இருபது நாட்கள் அவுட்டோருக்குக் கிளம்ப வேண்டும். சமையலறையில் இரவு எடுத்து வைத்த பாலில் விஜயலக்ஷ்மி காப்பி கலக்கிறாள். விடியற்காலை சப்தங்களில் லக்ஷ்மி நாராயணனின் மகனும் கொட்டைப் பாக்கு போல் விழித்துக் கொள்கிறான். கொட, கொடவென்று வாசலில் அவன் தாயாரிடம் பேசுகிற சப்தம் இருளில் பெட்டி சுமந்து ரயில் தண்டவாளம் வரைக்கும் கேட்டுக் கொண்டிருக்கிறது.

அடிக்கடி ஷூட்டிங் நடக்கிற அவுட்டோர் கிராமம். மெயின் ரோட்டில் கிழட்டு வேனைக் கண்டதும் சிறுவர்கள் கூச்சலிட்டபடியே பின்தொடர்ந்து ஓடுகிறார்கள். அது லொட லொடத்து நிற்கிற இடத்தில் ஏராளமாய் கும்பல் திரண்டு விடுகிறது. கையில் குச்சியுடன் காஸ்ட்யூமரிடம் போலீஸ் உடை வாங்கி புரொடக்ஷன் ஆட்கள் உள்ளூர் மந்தையை ஓர் இடத்தில் நிற்கவிடாமல் விரட்டி மூர்க்கமாய்ச் சமாளிக்கிறார்கள். மதியம் சாப்பாடு முடிந்து எடுக்கிற காட்சிக்குக் கும்பல் தேவையாக இருக்கிறது.

''அண்ணே, வாங்கண்ணே.''

சிரித்த முகத்தில் சினிமாக்காரர்கள் வருந்தி அழைக்கிறார்கள். தொலைவில் உள்ளூர் கும்பல் மிரட்சியுடன் பார்க்கிறது.

மாரியம்மன் கோவில் முன் ஒரு டான்ஸ். வரப்பு மேட்டில் ஒரு சவால். மரத்தடியில் பஞ்சாயத்து. வைக்கோல் போரில் சிலம்புச் சண்டை. வாய்க்காலில் தோழிகளுடன் கதாநாயகி குளிப்பது என ஒரு படப் புதிர் போல பல நாள் வேலைகளில் முழுமை ஒரு யூகமாய்த் தெரிகிறது. பக்கத்து டவுன் ஹோட்டலில் துபாய் காட்சிகள் உள்ளறைக் காட்சிகளாய் எடுக்கப்பட்டு விட்டன. லக்ஷ்மிநாராயணனுக்கு மொத்தம் ஏழு சீன்கள். குடும்பத்தினரை நேசிப்பது. அனைவரையும் பிரிந்து தாயாரை நமஸ்கரித்து துபாய் போவது. நடுவே மாரியம்மன் டான்ஸில் இரண்டு ஷாட்கள். ஊரிலிருந்து பணம் கேட்டு துபாயில் கடிதம் வருவது. அண்ணன் பணத்தை அனுப்புவது. இடைவேளைக்குச் சற்று முன்பாக ஒருமுறை ஊருக்கு வருவது. கடைசியில் கதாநாயகியின் மரணத்தின் போது பெட்டியுடன் வந்து ஒரு ஓரமாய் நிற்பது. அதிகம் வசனங்கள் இல்லை. ஆனால் உணர்ச்சிகரமான காட்சிகள். அனைவரும் தங்கவைக்கப்பட்டிருக்கிற கிராமத்துப் பெரியவர் வீட்டில் உதிரி நடிகர்களிடையே அவனைப் பற்றிய பேச்சு உயர்வாய் நிலவுகிறது. தனியே நிறைய பேர் அவனை மனம் விட்டுப் பாராட்டியிருக்கிறார்கள். ஷூட்டிங் நடுவே எதற்கும் இருக்கட்டும் என்று சத்துணவுச் சிறுவர்கள் கசங்கிய நாற்பது பக்க நோட்டுகளில் அவனிடமும் கையெழுத்து வாங்குகிறார்கள். ஒரு துவக்கம் உண்டாகி விட்டது. இனிமேலும் வாழ்க்கை இவ்விதமாகவே இருந்து விடப் போவதில்லை. தனியே புகைப்படக்காரரிடம் பேசி லக்ஷ்மிநாராயணன் சம்பந்தப்பட்ட புகைப்படப் பிரதிகளுக்குச் சொல்லியாயிற்று.

சென்னையைச் சுற்றிய கிராமங்களில் அடுத்த கட்ட படப்பிடிப்பு. அந்த மாதம் பொம்மை, பேசும் படம், பிலிமா

# பிரும்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர் அவர்களின் உபன்யாஸ கேஸட்டுகள்



ஆஸ்தீக உலகில் பிரும்மஸ்ரீ தீக்ஷிதர் அவர்களை அறியாதவர்கள் இருக்க முடியாது. இதிஹாஸ புராணங்களை கேட்பவர்கள் மனதில் ஆழப் பதியும்படி. நாம் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்களுடன் அம்ருத வர்ஷமாக அவர் நிகழ்த்திய உபன்யாஸங்கள் இன்றும் பல்லாயிரக்கணக்கான ஆஸ்திகர்கள் மனதில் ஒலித்துக் கொண்டு இருக்கிறது. தாங்கள் நேரில் கேட்டு அனுபவித்ததை, தாங்களும் அடுத்த தலைமுறையினரும் கேட்டு அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆஸ்திகர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, பல்லாயிரக்கணக்கான ஆஸ்திகர்கள் முன்னிலையில் ஸ்ரீ தீக்ஷிதர் நிகழ்த்திய உபன் யாஸங்களின் ஒலிப்பதிவுகள், தற்போது காஸட்டு வடிவில் வெளிவர இருக்கிறது. அடுத்த தலைமுறையினருக்கு நமது வேதம், சாஸ்திரம், இதிஹாஸ புராணங்கள், பிராசீன தர்மங்கள் இவைகளில் நம்பிக்கை வளர்க்கவும், அவர்களை நல்வழிப் படுத்தவும் விரும்பும் ஆஸ்தீகர்களுக்கு இது ஒரு பொக்கிஷம்.

சேலம் டவுன் சின்ன திருப்பதியில் பிரகாசிக்கும் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் ஸ்ரீ அதிஷ்டான நித்ய பூஜை, ஆராதனை கைங்கர்யங்களுக்காக ட்ரஸ்டு ஏற்படுத்தப்பட்டுள்ளது. ட்ரஸ்டிற்கு ரூ 1000/- நன்கொடை அளிக்கும் அன்பர்களுக்கு ஸ்ரீமத் பாகவத சப்தாஹ கேஸட்டுகளும், ரூ 1200/- அளிப்பவர்களுக்கு ஸ்ரீ ராமாயண கேஸட்டுகளும் அளிப்பதாக உள்ளது. இக் கேஸட்டுகள் ஏப்ரல் மாதம் வெளிவர இருக்கிறது. ஆஸ்திகர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்பி முன்பதிவு செய்து கொள்ளலாம்.


பிரும்மஸ்ரீ சேங்காலிபுரம்

அனந்தராம தீக்ஷிதர் அதிஷ்டானம் ட்ரஸ்டு,

நெ. 1, இரண்டாவது கிராஸ்

மரவனேரி எக்ஸ்டென்ஷன்,

சேலம் - 636 007.

லயா போன்ற எல்லா சினிமா இதழ்களிலும் கும்பலினிடையே லக்ஷ்மிநாராயணன் நிற்கிற திரைப்பட ஸ்டில் வெளியாகியிருக்கிறது. விடுமுறை முடிந்து அலுவலகம் திரும்புகிற போது ஒரு கதாநாயகனுக்குரிய பெரிய வரவேற்பு அலுவலகத்தில் காத்திருக்கிறது.

''எப்படா படம் ரிலீஸ்?''

''தீபாவளி.''

''இன்னும் ரெண்டு மாசமா?''

''ஆமாம். டப்பிங், எடிட்டிங் எல்லாம் இருக்கே.''

''நம்மளை மறந்துடாதே. முதல் நாள் முத ஷோவுக்கு டிக்கெட்.''

''கண்டிப்பா.''

மகிழ்ச்சியில் கன்னம் சிவந்து சிரிக்கிறான்.

''லக்ஷ்மிநாராயணன்!''

''ஓ!''

''மேனேஜர் கூப்பிடறார்.''

கண்ணாடி அறைக் கதவு திறந்து லக்ஷ்மிநாராயணன் நுழைகிறான்.

''உட்காருங்க.''

மேனேஜர் பெல்லடித்துக் காப்பி வரவழைக்கிறார். லக்ஷ்மிநாராயணன் ஷூட்டிங் அனுபவங்களைக் கேட்கிறார். பெரிய ஆள் ஆனா மறந்துடாதீங்க சார். நம்ம பேங்குக்கு நிறைய டெபாஸிட் கொண்டு வாங்க. சிரித்துக் கொண்டே எழுந்து அவர் கை குலுக்கிய விவரம் அலுவலகம் முழுவதும் பரபரப்பாய்ப் பேசப்படுகிறது. கரண்ட் அக்கவுண்ட் வனஜா இருந்தால் சந்தோஷப்பட்டிருப்பாள். அவள் கண்களின் காந்தம் வேறு கண்களில் அவனுக்குத் தெரிகிறதில்லை.

வரவிருக்கும் எதிர்காலத்தில் பெரும் நம்பிக்கை பிறந்திருக்கிறது. எனவே தீபாவளி தமிழர் திருநாளாகிறது. துணிக்கடையில் கணக்கு மூவாயிரம் தாண்டுகிறது. காலை மூன்று மணி துவங்கி நாள் முழுவதும் வெடிச் சப்தம் எதிர் வீட்டில் இருக்கவே முடிகிறதில்லை.

''சாயங்காலம் அஞ்சு மணிக்கே டாக்ஸியை வரச் சொல்லியிருக்கேன். உங்கப்பா, அம்மாவையும் ரெடியாயிருக்கச் சொல்லு.''

''அப்பா வர மாட்டார்.''

''ஏன்?''

''அவர் காசிக்குப் போனப்போ சினிமா போறதை விட்டுட்டாராம்.''

''காசிக்குப் போறவங்க கத்தரிக்காயை விடுவாங்க, கேள்விப்பட்டிருக்கேன். இது என்ன நூதன மோசடியாயிருக்கே? ஒரு நாளைக்குக் கேபிள் டீவியிலே ரெண்டு படம் பார்க்கறதுல குறைச்சல் இல்லே. அதெல்லாம் தெரியாது. அஞ்சு மணிக்கு டாக்ஸி வரும். ங்கொப்பனை தம்பதி சமேதரா வந்து சேரச் சொல்லு.''

முதியோர் பள்ளிக்குப் போக அடம் பிடிக்கிற குறும்புக்காரப் பெரியவரைப் போல வேண்டாவெறுப்பாய் அங்கவஸ்திரத்தில் மாமனார் டாக்ஸியில் ஏறுகிறார். படம் முடிந்து வீடு திரும்பும் வரை நூற்றைம்பது ரூபாய் வாடகை பேசியிருக்கிறது. இன்றைக்கு இப்படிப் போவதற்கு நேற்றைக்கு ஒரு நடை லிங்கிச் செட்டித் தெருவுக்குப் போகும்படியாகி விட்டது. கடவுளே, தீபாவளிக் கும்பலில் படம் அடிபட்டு விடாமல் நூறு நாட்கள் ஓட வேண்டும். எல்லாம் ஒரு நேரம்தான். இதைவிட மட்டமான படங்களெல்லாம் அதற்கு மேலேயே ஓடியிருக்கின்றன.

டாக்ஸி வழியில் பங்க்சராகி தியேட்டரில் நுழையும் போது டைட்டில்ஸ் முடிந்து படம் துவங்கி விடுகிறது. இதோ, அவன் கண்முன்னே பார்த்த அவுட்டோர் கிராமம். இருளில் முகம் பிரகாசிக்க லக்ஷ்மிநாராயணன் மனம் துடிக்க காத்திருக்கிறான். சீக்கிரமே இடைவேளை வந்து விட்டதாகியிருக்கிறது. அதுவரை ஒரு காட்சியில் கூட அவன் இல்லை.

வீடு திரும்புகிற வழியில் டாக்ஸி மௌனமாய் இருக்கிறது. தீபாவளி வெடிகடைசியில் வெறும் புஸ்வாணமாய்ப் போய் விட்டது. படத்தின் நீளம் கருதி அவன் நடித்த காட்சிகள் வெட்டப்பட்டிருக்கின்றன. துபாயில் அண்ணன் இருப்பதாக வசனம் வருகிறது. பணம் கேட்டுக் கடிதம் எழுதுகிறார்கள். பணமும் வருகிறது. ஆனால் ஒருமுறை கூட துபாய் அண்ணனைக் காட்டவேயில்லை. ''இந்தத் தியேட்டர்தானே?'' என்று கேட்க நினைத்த மாமனாரே சூழ்நிலை இறுக்கம் கருதி வாய் மூடி வருகிறார். ஓடுகிற டாக்ஸியிலிருந்து குதித்து விடலாம் என்று லக்ஷ்மிநாராயணனுக்குத் தோன்றுகிறது.

'அப்பா எப்ப வருவார்?' என்று படம் நெடுக கேட்டுக் களைத்த மகன் மடியில் தலைவைத்து, ஜன்னல் காற்றில் கேசம் புரள, வாயில் விரல் போட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறான்.

(தொடரும்)

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

**கல்கி, மார்ச் 1, 1943**

**குசேலர்**



தமிழ் டாக்கிகளில் சில சமயம் தப்பித் தவறி வேஷங்கள் பொருத்தமாக அமைந்து விடுவதும் உண்டு. ஆனால் பாபநாசம் சிவனுக்குக் குசேலர் வேஷம் பொருத்தமாயிருந்தது போல் வேறு யாருக்கும் அவ்வளவு பொருத்தமான வேஷம் அமைந்ததில்லை. இவ்வளவு அபூர்வமான பொருத்தத்தை ஒரு தடவையோடு விட்டுவிடக் கூடாதென்றுதான் 'குபேர குசேலர்' என்ற படத்தைப் பிடிக்கிறார்கள் போலும். இந்தப் படத்தில் மறுபடியும் சிவன் குசேலராகக் காட்சி தருகிறாராம். தமிழுக்கும் தமிழ் இசைக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் பாபநாசம் சிவன் செய்திருக்கும் சேவைகள் ஒப்பற்றவை. நூற்றுக்கணக்கான தமிழ்க் கீர்த்தனங்களை இயற்றியிருக்கிறார். அவற்றில் பல, சங்கீத வித்வான்கள் கச்சேரிகளில் உற்சாகத்துடன் வித்யாசப்படுத்திப் பாடக்கூடியவை. கர்நாடக சங்கீதத்தை ஓரளவு தமிழ் டாக்கிகளில் புகுத்திய பெருமையும் பாபநாசம் சிவனுக்கு உண்டு. இப்பெரியார் நீடூழி வாழ்ந்து தமிழ் நாட்டுக்கு இன்னும் பல அரிய தொண்டுகளைச் செய்யும்படி பகவான் அருள் புரியட்டும்.

- அட்டைப்பட விளக்கம்

**நிகழ்ச்சிச் சித்திரம் - உம்மன்**







# அன்புள்ள அருண் கண்மணி,

அத்தை கண்மணி அதிசயத்துடன் எழுதுவது...

நீயே எதிர் வீட்டு அங்கிளிடம் போய்க் கேட்டு ஒரு புது விஷயத்தை எவ்வளவு அழகாய் எழுதியிருக்கே! எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது.

உடம்பில் ஒரு பகுதிக்குக் கோளாறு வந்தா இன்னொரு பகுதியிலயும் சில சமயம் பிரச்னை வர்றது அதிசயம்தான். அதைவிடப் பெரிய அதிசயம் என்ன தெரியுமோ? மனகல கவலையோ, பயமோ இருந்தா அதனால் கூட உடம்புக்குக் கோளாறு வரும்! இதுக்கு கரெக்டா உதாரணம் சொல்ல ணும்னா, சில பையன்களுக்குப் பரீட்சை சமயத்துல எப்ப வும் ஜுரம் வந்துடறதைச் சொல்லலாம். பாவம்! அதனா லேயே அவங்க நல்ல மார்க் வாங்க முடியறதில்லை. சில பேருக்குப் பரீட்சையே எழுத முடியாமல் கூடப் போயிடுது!

ஆனால் உனக்குப் பரீட்சை பயம் கிடையாதுன்னு எனக் குத் தெரியும். எதுக்குப் பயப்படணும்? நீதான் எல்லாப் பாடங்களையும் அப்பப்போ படிச்சு முடிச்சுடறையே! அதோடு புரிஞ்சுக்கவும் செய்யறியே! பாடத்தைச் சரியாப் புரிஞ்சுக்கிட்டா எல்லாப் பரீட்சையும் ஈஸிதான். ஏன்னா, நீங்க எவ்வளவு தூரம் பாடங்களைப் புரிஞ்சுக்கிட்டிருக்கீங் கன்றதைக் கண்டுபிடிக்கத்தான் டீச்சர்கள் பரீட்சை வைக்க றாங்க.

இது தெரியாமல் உன் கிளாசுல சில பையன்கள் பயந்தா அவங்களுக்கு நீ தைரியம் சொல்லு. கேலி செய்தால் அவங்க பயம் ஜாஸ்தியாயிடும்!

'அத்தை என்னதான் சொன்னாலும் எக்ஸாம்ங்கிறது அப்படி ஒண்ணும் ஜாலியான விஷயமில்லை'ன்னு நீ மன சுக்குள்ள நினைச்சுக்கறது எனக்குத் தெரியும்!

ஆனால் எக்ஸாம் மாதிரி ஒரு கஷ்டமான விஷயத்துக்கு அப்புறம் விடுமுறைன்னு ஒரு 'டாப்'பான விஷயம் காத்துக் கிட்டிருக்கே! ஸ்கூலும் எக்ஸாமும் இல்லாம வெறும் லீவ் மட்டுமே இருந்தா எப்படி இருக்கும் யோசிச்சுப் பாரு... ரொம்ப ரொம்ப போர் அடிக்கும்னு நான் நினைக்கறேன். பப்லுவும் நீயும் என்ன நினைக்கறீங்க?



போன வாரம் அருணின் கடிதத்தில் 'சில பேருக்கு மட்டும் ஏற்படுகிற அலர்ஜிதான் Travel Sickness ஆம்' என்று வெளியாகியிருக் கணும். தவறு நேர்ந்து விட்டது. வருந்துகிறோம்.

உன் அன்பு,
அழகு அத்தை

# ஆடப் பிடிக்கா விட்டாலும் ஆடினேன்!

சௌகார் ஜானகி

**ஷா**ஃபி முகமது சாலையில் இருந்த அந்த வீட்டில் குடியிருந்தவர் : சாவித்ரி!

ஒரு நடிகை என்ற முறையில் மட்டுமே அப்போது அவரை அறிந்திருந்தார் ஜெமினி. எங்களைப் பரஸ்பரம் அறிமுகம் செய்து வைத்த போது சாவித்ரியை எனக்கு மிகவும் பிடித்து விட்டது.

'வெகுளித்தனமான, குழந்தை முகம் உடைய இவரால் எந்தப் பிரச்னையும் வராது' என என்னுடைய உள்மனம் உணர்த்த, 'இன்னொரு நடிகை வசிக்கும் வீட்டில் நாமும் குடியிருக்க வேண்டாம்' என்ற எனது வைராக்கியம் இலேசாகக் கரைய ஆரம்பித்தது. அதற்கு மேலும் இடமளிக்காமல் என்னை நானே சுதாரித்துக் கொண்டு, முதலில் எடுத்த முடிவையே ஜெமினியிடம் நாசூக்காகத் தெரிவித்தேன். அவரும் என் எண்ணங்களைப் புரிந்து கொண்டு, ''அதனாலென்ன; உனக்கு வேறு வீடு நிச்சயமாய்க் கிடைக்கும். கவலைப்படாதே'' என்றார். அடுத்த சில நாட்களுக்குள் எனக்கு ராயப்பேட்டையில் ஒரு வீட்டின் போர்ஷனைக் காண்பித்தார். என் கணவருக்கும் எனக்கும் வீடு பிடித்துப் போய் விட, அங்கே சீக்கிரமே குடிபெயர்ந்தோம்.

**சா**வித்ரி இருந்த வீட்டில் நான் வசிக்காவிட்டாலும், அந்த அறிமுகத்துக்குப் பிறகு அவரும் நானும் நெருங்கிய தோழிகளானோம். பின் நாட்களில் ஒரே மாதிரியான நகைகளைச் செய்து கொள்ளும் அளவுக்கு எங்கள் நட்பு வளர்ந்தது!



* நல்ல நண்பர்

ஆனால் அந்த ஆரம்ப கட்டத்தில் நகைகள் செய்து கொள்ளும் அளவுக்கு வசதி எனக்கு இல்லை. இருந்தாலும் கார் ஒன்று வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது! காரணம், சினிமா மூலம் ஓரளவு பிரபலமாகி விட்டதால் ரிக்ஷாவிலோ பஸ்ஸிலோ முன் போல் சுதந்திரமாக என்னால் பயணம் செய்ய முடியவில்லை. எனவே தவணை முறையில் ஒரு கார் வாங்கத் தீர்மானித்தோம் என் கணவரும் நானும். அவர் தேர்ந்தெடுத்தது ஒரு 'மாரிஸ் மைனர்' காரை. நாங்கள் விரும்பி வாங்கிய மற்றொரு பொருள் ஃப்ரிட்ஜ்! அந்த இரண்டும் எங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்த போது எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை வார்த்தைகளில் வர்ணிக்க முடியாது. என் குழந்தைகள், கணவருடன் முதன் முதலாகச் சொந்தக் கார் சவாரி செய்த போது ஏதோ ஆகாய விமானத்தையே வாங்கி விட்டது போல் ஒரு பூரிப்பு!



* நெருங்கிய தோழி

கார் வாங்கினால் போதுமா? ஓட்ட ஒரு டிரைவர் வேண்டுமே. நாராயணன் என்பவரை டிரைவராக அமர்த்தினேன்.



பத்திரிகை ஆசிரியர் : 'வாசகர் நல்லா யோசிக்கறது மாதிரி ஒரு கதை எழுதிக் கொண்டு வாங்க'ன்னு சொன்னது உண்மைதான். ஆனா, 'இந்தக் கதையில என்ன இருக்கு'ன்னு யோசிக்கறது மாதிரி எழுதிக் கொண்டு வந்திருக்கீங்களே...!

– மிஸ்டர் தஞ்சை

தமது ஒரு செய்கையால் நாராயணன் மறக்க முடியாத நபராக என் உள்ளத்தில் இடம்பெற்றார்.

அன்றைக்குத் தீபாவளி நாள். ஊரே கோலாகலமாய்க் கொண்டாட்டத்தில் மூழ்கியிருந்தபோது, என் வீட்டில் மட்டும் இருள்! பண்டிகையைக் கொண்டாடா விட்டாலும், பசித்த குழந்தைகளுக்குச் சோறு போடக் கூட முடியாத நிலைமை. அதை உணர்ந்து கொண்ட நாராயணன், தானாகவே சென்று ரொட்டியும், பாலும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார்.

''இத்தனை நாள் உங்ககிட்டே கைநீட்டிச் சம்பளம் வாங்கினதுக்கு இது கூடச் செய்யலைன்னா எப்படிம்மா!'' என்று நாராயணன் சொன்ன போது கடவுளே அவர் உருவில் வந்ததாக நினைத்து விட்டேன். என் கண்கள் தளும்பி விட்டன.

இச்சம்பவத்தின் பாதிப்பு மிக ஆழமானது. இன்று வரை நான் தீபாவளி என்றால் புத்தாடை அணிந்து கொள்ள மாட்டேன்; பட்டாசு வெடிக்க மாட்டேன்: வீட்டில் வேலை பார்ப்பவர்களுக்குப் புதிய ஆடை வாங்கிக் கொடுத்து, வயிறாரச் சாப்பாடு போடுவேன். அப்போது கூட, பட்டாசு வெடிப்பது அறவே பிடிக்காது; ஏதோ ரூபாய் நோட்டையே எரிப்பது போன்ற ஒரு உணர்வு!

**க**ஷ்டம் வந்தபோதெல்லாம் நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையை நான் கைவிட்டதே இல்லை. இம்முறை 'ரோஜுலு மாராயி' (காலம் மாறிப் போச்சு!) பட வாய்ப்பு மூலம் நல்ல காலம் பிறந்தது!

அந்தத் தெலுங்குப் படத்தில் ஹீரோ நாகேஸ்வர ராவ். எதையும் சட்டை செய்யாத கட்டிப் பெண் பாத்திரம் எனக்கு! நெற்றியில் வந்து விழும் முடியை 'ஸ்டைலாக'த் தள்ளி விட்டபடி வசனம் பேச வேண்டும்! அந்தக் காலத்துக்கு அது புதுமையான விஷயம்! படம் 'ஹிட்' ஆயிற்று. நகரங்களில் மட்டுமின்றி பட்டி தொட்டிகளில் எல்லாம் கூட மாபெரும் வெற்றி! படத்தின் வெற்றியைத் திருவிழா போல் கொண்டாடினார்கள்.

'ரோஜுலு மாராயி' படம் தொடர்பாக எனக்கு இன்னொரு இனிய நினைவும் உண்டு...

பொதுவாக எனக்கு டான்ஸ் என்றாலே பிடிக்காது. சிறு வயதில் என் தங்கைக்கும் எனக்கும் நாட்டியம் கற்றுத் தர நட்டுவனார் வருவார். 'நாளைக்குக் கண்டிப்பாகக் கற்றுக் கொள்கிறேன். ஸாரி மாஸ்டர்!' என்று கவரில் எழுதி வைத்து விட்டு நான் டான்ஸ் கிளாஸுக்கு டிமிக்கி கொடுத்து விட்டுப் போய் விடுவேன்!

சினிமாவில் நடனக் காட்சிகளில் ஆடவும் எனக்குக் கட்டோடு பிடிக்காது. 'ஏன் சார் இந்தப் பாடல் காட்சியில் எனக்குப் பதிலாக வேறு யாரையாவது ஆட வைக்கக் கூடாதா?' என்று டைரக்டர்களிடம் நான் தமாஷாகக் கேட்டதுண்டு! அப்படியிருந்தும் 'நான் கண்ட சொர்க்கம்' படத்தில் பரத நாட்டியமே ஆடியிருக்கிறேன்! (அதன் தெலுங்கு வடிவத்தில் அதே பாத்திரத்தை என் தங்கை செய்திருக்கிறாள்!)

**நா**ட்டியம் பிடிக்காத நானே 'ரோஜுலு மாராயி' படத்தில் நடனமாடிய ஒரு நடிகையின் ஆட்டத்தை வெகுவாக ரசித்துப் பாராட்டினேன். ''இந்த இளம் பெண் கூடிய சீக்கிரமே மிகப் பிரமாதமாக வருவாள் பாருங்கள்!'' என்று நாகேஸ்வர ராவிடம் சொன்னேன்.

''எப்படிச் சொல்கிறாய்?'' என்றார் அவர்.

''அவள் நடனமாடும் போது கவனித்தேன். தரையில் பாவாமல் கால்கள் பந்து போல் மென்மையாகத் துள்ளுகின்றன...'' என்றேன்.

நான் சொன்னது ரொம்ப சீக்கிரமே பலித்தது.

'ரோஜுலு மாராயி' பாராட்டு விழாவுக்காக ஹைதராபாத் போயிருந்தோம். நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலில் ஒரு பிரபல ஹிந்தி பட டைரக்டரும் தங்கியிருந்தார். 'ரோஜுலு மாராயி'யில் நடனமாடிய பெண்ணின் திறமையைப் பார்த்து அசந்து போய் அவளைத் தமது அடுத்த படத்துக்கு புக் செய்ததுடன், மறுநாளே அவளைத் தம்முடன் விமானத்தில் பம்பாய்க்கு அழைத்துப் போய் விட்டார்...

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# உங்கள் இன்ஷ்யூரன்ஸ் உரிமைக் கோரிக்கையை விரைவில் தீர்க்க எங்களுக்கு உதவும் எளிதான நடவடிக்கைகள்.

துரதிர்ஷ்டம் என்றும் தாக்காது என்ற நம்பிக்கையுடன் நீங்கள் நிகழக்கூடிய இழப்பு நிலைகளுக்கு எதிராக விவேகத்துடன் இன்ஷ்யூர் செய்கிறீர்கள். ஆனால், அவ்வாறு நடந்தாலும், உங்கள் முதல் நோக்கம் உங்கள் உரிமைக் கோரிக்கையைத் தீர்ப்பதே. உரிமைக் கோரிக்கைகளின் உடனடியான மற்றும் நியாயமான தீர்வே ஒரு சிறந்த சேவைக்கான அடையாளம் என்று நாங்கள் நம்புகிறோம்.

பிறகு, உரிமைக் கோரிக்கைகளின் தீர்வில் தாமதம் மற்றும் தடங்கல் உள்ளதைப் பற்றி நீங்கள் ஏன் கேள்விப்படுகிறீர்கள்? இதற்கு பல்வேறு காரணங்கள் உள்ளன. நாங்கள் கடைப்பிடிக்கும் செயல்முறைகளை வலுவாக்க அனைத்து நடவடிக்கைகள் எடுக்கிறோம்.

ஆனால், உங்களுக்கு சேவை செய்ய எங்களுக்கு உதவ நீங்கள் சிலவற்றை செய்ய முடியும். ஆரம்பத்திலிருந்து நாம் துவங்குவோம். நம் ஒப்பந்தத்தின் அடிப்படையான பாலிசி இணைந்த பிரேரணைப் படிவத்தை நீங்கள் நன்கு படிக்க வேண்டும். பிரேரணையில் கூறப்பட்டுள்ள குறிப்புகள் பாலிசியில் தவறாமல் இருக்கின்றனவா என்று பரிசீலனை செய்யவும். பிரேரணையில் குறிப்பிட்டுள்ள தகவல்களில் எப்பொழுதாவது மாற்றம் இருந்தால், அவற்றைப் பற்றி எங்களுக்கு உடனே தெரிவிக்கவும்.

## அறிவிப்பு

இழப்பைப் பற்றிய அறிவிப்பு உடனே கொடுக்கப்பட்டால் இழப்பை விரைவில் மதிப்பிட, குறைக்க மற்றும் உங்கள் உரிமைக் கோரிக்கையைத் தீர்க்க உதவுகிறது. மேலும் இது ஒரு சட்டபூர்வமான தேவையாகும். உரிமைக் கோரிக்கை வந்து சேர்ந்த அறிவிப்பு அல்லது உங்களுக்கு எதிராக வழக்கை தாக்கல் செய்த அறிவிப்பும் இதனுள் அடங்கும். களவு, மூன்றாம் நபருக்கு காயம் அல்லது இறப்பு போன்ற சில சந்தர்ப்பங்களில் காவல் துறையினருக்கும் அறிவிக்க வேண்டும். தீ மற்றும் கலகத்தினால் ஏற்பட்ட சேதத்திற்கு காவல் துறை மற்றும் தீயணைக்கும் படைக்கு அறிவிப்பது மிக அத்தியாவசியமாகும். இத்தகைய நடவடிக்கைகளில் ஏதாவது காலதாமதம் ஏற்பட்டால், உங்கள் உரிமைக் கோரிக்கையின் தீர்வும் தாமதமாகலாம்.

## இழப்பைக் குறைக்கவும்

உங்கள் இழப்பைக் குறைப்பது சட்டப்படியான உங்கள் கடமை என்பதை நீங்கள் உணர வேண்டும். உதாரணமாக தீ விபத்து ஏற்பட்டால், அனைத்து சேதமாகாத சரக்குகளை உடனே பாதுகாப்பான இடத்திற்கு அப்புறப்படுத்தவும். சரக்குகள் போக்குவரத்தில் இருக்கும்போது ஏற்படும் இழப்பை மற்றொரு நிறுவனத்திலிருந்து பெறும்வாய்ப்பு இருக்கும்நிலையில் உரிமைக் கோரிக்கையை அந்த நிறுவனத்தின் மீதோ அல்லது இழப்பிற்கு காரணமாக இருந்த நபர்கள் மீதோ தாக்கல் செய்ய வேண்டும்.

## உரிமைக் கோரிக்கைப் படிவம்

ஒவ்வொரு இன்ஷ்யூரன்ஸ் பிரிவிற்கேற்ப வேறுபட்ட உரிமைக் கோரிக்கைப் படிவங்கள் உள்ளன. உங்கள் உரிமைக் கோரிக்கைப் படிவத்தில் இழப்பைப் பற்றிய அனைத்து தகவல்களைக் கொடுத்து கவனமாக நிரவு செய்யவும். சர்வேயர்களுக்கு முழு ஒத்துழைப்பை வழங்கி அனைத்து முக்கியமான தஸ்தாவேஜுகளை அவர்களுக்குக் காட்டி இழப்பை மதிப்பிட உதவவும்.

## பத்திரங்கள்

உரிமைக் கோரிக்கைப் படிவத்துடன் சில முக்கியமான பத்திரங்களும் உங்கள் உரிமைக் கோரிக்கையை உறுதிப்படுத்தத் தேவைப்படுகிறது. உதாரணமாக தீ மற்றும் கலவரத்திற்கான உரிமைக் கோரிக்கைக்கு தீயணைக்கும் படை மற்றும் காவல் துறை அறிக்கைகள், களவு உரிமைக் கோரிக்கைக்கு காவல் துறை அறிக்கை வாகனம் ஓட்டுவதற்கான லைசென்ஸ், ரெஜிஸ்ட்ரேஷன் புத்தகம் மற்றும் மோட்டார் உரிமைக் கோரிக்கைக்காக காவல் துறை அறிக்கை சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகள் அனுப்புவதினால் உங்கள் உரிமைக் கோரிக்கையை விரைவாக பரிசீலனை செய்யமுடியும்.

## உங்கள் உரிமைக் கோரிக்கையின் விரைவான தீர்வே எங்கள் அக்கறை.

### முக்கியம்

"ப்ரீமியம் இல்லையெனில்-இன்ஷ்யூரன்ஸ் இல்லை". நீங்கள் ப்ரீமியம் செலுத்தின பிறகே உங்கள் இழப்பு பாதுகாக்கப் படுகிறது. உங்கள் ப்ரீமியம் தொகையை முன்னதாகவே செலுத்தப்படுவதை உறுதி செய்யவும்.